# பிரயாணம்

கார்த்திகை மாதத்தில் ஒரு நாள் மாலை நேரத்தில் காஞ்சியிலிருந்து சிதம்பரம் போகும் சாலையில் கூண்டு இல்லாத இரட்டை மாட்டு வண்டி ஒன்று போய்க் கொண்டிருந்தது. அதில் சிவகாமியும் அவளுடைய அத்தையும் உட்கார்ந்திருந்தார்கள்.

வண்டிக்குப் பின்னால் சற்றுத் தூரத்தில் ரதி துள்ளி விளையாடிக் கொண்டும் ஆங்காங்கே சாலைக்குப் பக்கங்களிலே முளைத்திருந்த புல்லை மேய்ந்து கொண்டும் வந்தது.

சுகப்பிரம்மரிஷி ஒவ்வொரு சமயம் ரதியின் முதுகின்மேல் உட்கார்ந்தும், சில சமயம் சிவகாமியின் தோளின் மேல் உட்கார்ந்தும், சில சமயம் வண்டிக்கு மேலாகப் பறந்தும் பிரயாணம் செய்து கொண்டிருந்தார்.



பின்னால் இன்னும் சற்றுத் தூரத்தில் புத்த பிக்ஷுவும் ஆயனரும் பேசிக் கொண்டு நடந்து வந்தார்கள்.

* * *

அந்த வருஷம் ஐப்பசி மாதத்திலேயே மழை பிடித்துக் கொண்டு பதினைந்து நாட்கள் வரையில் விடாமல் பொழிந்தது. அதன் காரணமாக, ஏரிகள், குளங்கள் எல்லாம் தண்ணீர் நிறைந்து ததும்பிக் கொண்டிருந்தன. சாலை ஓரத்து ஓடைகளில் ஜலம் அலை மோதிக் கொண்டிருந்தது. ஆறுகள், வாய்க்கால்களில் இரு கரையையும் தொட்டுக் கொண்டு பிரவாகம் ஓடிக் கொண்டிருந்தது.

நன்செய் வயல்களில் இரண்டாம் போகத்து வெள்ளாமை அப்போதுதான் ஆரம்பமாகியிருந்தது. புன்செய்க் காடுகளில் கம்பும், கேழ்வரகும் செழித்திருந்தன.

விசாலமான சாலையில் இரு புறத்திலும் வளர்ந்திருந்த மரங்களும், ஆங்காங்கே வயல்களுக்கிடையே காணப்பட்ட தென்னந் தோப்பு

மாமல்லர் மேலும் பொங்கிய மகிழ்ச்சியுடன் பரஞ்சோதியைத் தழுவிக் கொண்டார்.

பிறகு, அன்னையை நெருங்கி அவளுடைய பாதங்களில் நமஸ்கரித்து, "அம்மா! விடை கொடுங்கள்" என்றார்.

பல்லவ சாம்ராஜ்யத்தின் பட்டமகிஷியின் கண்களில் அப்போது கண்ணீர் துளித்தது.

"குழந்தாய்! போய் வெற்றிமாலை சூடிக்கொண்டு க்ஷேமமாகத் திரும்பி வா!" என்றாள்.

மாமல்லர் எழுந்து நின்றார். ஏதோ சொல்ல எண்ணியவர், சிறிது தயங்கினார்.

"மாமல்லா! இன்னும் ஏதாவது சொல்லவேணுமா?" என்று தேவி கேட்டாள்.

"ஆம், அம்மா! ஆயனரையும் சிவகாமியையும் பற்றித் தந்தை சொல்லியனுப்பியதைக் கேட்டீர்களல்லவா?"

"கேட்டேன், நரசிம்மா! அதைப் பற்றி என்ன?"

"அவர்களைக் காஞ்சிக்கு அனுப்பிவிட்டு நான் போர்க்களம் போகிறேன், அம்மா!"

"அப்படியே செய், குழந்தாய்!"

"சிவகாமி இங்கே இருக்கும்போது அவளைத் தாங்கள் மருமகளைப் போல் பார்த்துக் கொள்ள வேண்டும்!"

"மருமகளைப் போலவா? முடியவே முடியாது. அந்தத் தாயில்லாப் பெண்ணை என் சொந்த மகளைப் போலவே பார்த்துக்கொள்கிறேன், மாமல்லா!"

இதைக் கேட்ட மாமல்லர் புன்னகையுடன் "இல்லை, அம்மா! மருமகளைப் போல் பார்த்துக் கொண்டால் போதும்!" என்றார்.

புவன மகா தேவியின் புருவங்கள் அப்போது நெரிந்தன. "ஏன் அப்படிச் சொல்கிறாய், குமாரா? மாமியாருக்கும் மருமகளுக்கும் அவ்வளவாக ஒத்துக் கொள்ளாது என்று உலகமெல்லாம் அறியுமே! மகளைப் போலப் பார்த்துக் கொள்கிறேன் என்று நான் சொல்வதை ஏன் மறுக்கிறாய்? ஒரு வேளை..." என்று கூறிவிட்டு, தேவி பரஞ்சோதியை நோக்கினாள். உடனே, அவளுடைய முகத்தில் மலர்ச்சி காணப்பட்டது. "ஓஹோ! புரிந்தது! ஆயனரிடம் சிற்பம் கற்க வந்த உன் தம்பி, ஆயனரின் மிகச் சிறந்த சிற்ப வடிவத்தையே கொள்ளை கொள்ளப் பார்க்கிறானா?" என்றாள்.

மாமல்லர், பரஞ்சோதி இருவருடைய முகங்களும் அப்போது பெரிதும் வேதனையைக் காட்டின.

"இருக்கட்டும், அம்மா! தாமதிக்க நேரம் இல்லை. நாங்கள் உடனே புறப்பட வேண்டும். விடை கொடுங்கள்" என்றார் மாமல்லர்.

* * *

சத்ருக்னன் காஞ்சிக்கு வந்து இரண்டு நாழிகைக்குள்ளே, குமார சக்ரவர்த்தியும் தளபதி பரஞ்சோதியும் காஞ்சிக் கோட்டையின் வடக்கு வாசல் வழியாகப் புறப்பட்டார்கள். திருக்கழுக்குன்றம் சென்று அங்கிருந்த தற்காப்புப் படைகளை மறுநாள் அதிகாலையில் புறப்படுவதற்கு ஆயத்தமாகும்படி கட்டளையிட்டார்கள். அன்று மாலையே ஆயனரின் வீட்டுக்குப் போய்ப் பார்த்துவிட்டு வந்து விட வேண்டுமென்றும், மறுநாள் அதிகாலையில் சைன்யத்துடன் தாங்களும் கிளம்பிவிட வேண்டுமென்றும் உத்தேசித்து, நரசிம்மரும் பரஞ்சோதியும் புரவிகள்மீதேறி, ஒரு சிறு குதிரைப்படை தங்களைப் பின் தொடர, விரைந்து சென்று ஆயனர் வீட்டை அடைந்தார்கள்.

போகும் போது, சிவகாமியிடம் இப்படி இப்படிப் பேசவேண்டும், இன்னின்ன சொல்ல வேண்டும் என்பதாக மாமல்லர் எவ்வளவோ மனக் கோட்டைகள் கட்டிக் கொண்டு போனார். பரஞ்சோதியை ஆயனரிடம் பேச விட்டுவிட்டுத் தாம் சிவகாமியுடன் தாமரைக் குளத்துக்குச் சென்று, அங்கே அவளிடம் விடை பெற்றுக் கொள்வதாகவும் உத்தேசித்திருந்தார். ஆனால், ஆயனரின் அரண்ய வீட்டை அடைந்தபோது, அவருடைய ஆகாசக் கோட்டைகள் எல்லாம் சிதறி விழுந்தன. வீட்டின் முன் கதவைப் பெரிய பூட்டுப் போட்டுப் பூட்டியிருந்தது! வீட்டிற்குள்ளேயும் வெளியேயும் பரிபூரண நிச்சப்தம் குடி கொண்டிருந்தது!

படுதுரோகமான காரியத்தில் அவன் இறங்கியிருக்கிறான். அந்தத் துர்விநீதனுக்குத் தக்க தண்டனையளிக்கும் பொறுப்பைத் தங்களுக்குச் சக்கரவர்த்தி அளித்திருக்கிறார். திருக்கழுக்குன்றத்திலுள்ள பல்லவத் தற்காப்புப் படையுடன் தாங்கள் புறப்பட்டுச் சென்று, துர்விநீதன் காஞ்சியை அணுகுவதற்கு முன்னால் அவனை முறியடிக்க வேண்டும் என்று சொல்லி அனுப்பியிருக்கிறார்!"

மாமல்லர் ஆவேசம் வந்தவரைப் போல் சத்ருக்னனிடம் ஓடிச் சென்று அவனைத் தழுவிக்கொண்டு, "சத்ருக்னா! இவையெல்லாம் உண்மைதானே? நான் கனவு காணவில்லையே? நிஜமாகத்தானே சக்கரவர்த்தி எனக்கு விடுதலை அளித்திருக்கிறார்? நிஜமாகத்தானே என்னைக் கங்கநாட்டுப் படையுடன் போராடுவதற்குப் போகச் சொல்லியிருக்கிறார்?" என்று பரபரப்புடன் கேட்டார்.

"ஆம், பிரபு! இதெல்லாம் கனவல்ல; உண்மைதான். தாங்கள் சந்தேகப்படுவீர்களோ என்றுதான் 'விடைவேல் விடுகு'ம் கொடுத்து அனுப்பியிருக்கிறார்" என்று சத்ருக்னன் ஓலை ஒன்றை அவரிடம் எடுத்துக் கொடுத்தான்.

பல்லவ குலத்தின் சின்னங்களாகிய விடை (ரிஷபம்)யும் வேலும் பொறித்த அந்த ஓலையை மாமல்லர் படிக்கும்போது அவர் முகத்தில் உற்சாகம் பொங்கிற்று. படித்து முடிக்கும் சமயத்தில் அவருடைய புருவங்கள் சிறிது நெரிந்தன. நிமிர்ந்து பார்த்து, "சத்ருக்னா! உன்னிடம் ஏதோ வாய்மொழியாகச் செய்தி அனுப்பியிருப்பதாகச் சக்கரவர்த்தி எழுதியிருக்கிறாரே! அது என்ன?" என்று கேட்டார்.

"ஆம், பிரபு! எத்தனையோ சாம்ராஜ்யக் கவலைகளுக்கிடையே பல்லவ நாட்டின் கலைச் செல்வத்தைப் பாதுகாக்கும் பொறுப்பையும் சக்கரவர்த்தியால் மறக்க முடியவில்லை. ஆயனச் சிற்பியாரும் அவர் மகளும் காஞ்சிக்கு வந்தாகி விட்டதா என்று என்னைக் கேட்டார். 'இல்லை' என்று நான் தெரிவித்தேன். காஞ்சிக் கோட்டை முற்றுகைக்கு உட்படும் காலம் சமீபித்து விட்டபடியால் அவர்கள் உடனே காஞ்சிக்கு வந்து விடவேண்டுமென்று சக்கரவர்த்தி அபிப்பிராயப் படுகிறார். தாங்கள் போர்க்களத்துக்குக் கிளம்புவதற்கு முன்னால் நேரில் ஆயனர் வீட்டுக்குச் சென்று அவர்களைக் காஞ்சிக்கு அனுப்பிவிட்டுப் போகவேண்டும் என்று தெரிவிக்கச் சொன்னார்."

இதைக் கேட்ட மாமல்லரின் மகிழ்ச்சி பரிபூரணமாயிற்று. யுத்தத்துக்குப் போவதற்கு முன்னால் சிவகாமியைப் பார்த்து விடை பெற்றுக் கொண்டு போக அவர் விரும்பினார். சக்கரவர்த்தியே அவ்விதம் சொல்லியனுப்பியுள்ளபடியால் தயக்கமின்றி ஆயனர் வீட்டுக்குப் போகச் சௌகரியம் ஏற்பட்டு விட்டது.

சிவகாமியின் விஷயத்தில் தம் மனோ நிலையை அறிந்துதான் சக்கரவர்த்தி அவ்விதம் செய்தியனுப்பியிருப்பாரோ என்று ஒரு கணம் அவருக்குத் தோன்றியது. ஆனால், அவருக்குத் தம் மனோநிலை எப்படித் தெரிந்திருக்க முடியும்? ஆ! தம் அருமைத் தோழர் பரஞ்சோதிதான் சொல்லி அனுப்பியிருக்க வேண்டும். இந்த எண்ணத்தினால் பரஞ்சோதியின் மேல் அவருக்கிருந்த சிநேக உணர்ச்சி பன்மடங்கு பெருக, அருகேயிருந்த அவருடைய கரத்தைப் பற்றித் தம் நன்றியைத் தெரிவிப்பதற்கு அறிகுறியாக அழுத்திப் பிடித்தார்.

அவருடைய எண்ணப் போக்கை உணர்ந்த பரஞ்சோதி, அதைத் திருத்தவும் மனமில்லாதவனாய், சத்ருக்னனைப் பார்த்து, "ஐயா! எனக்கும் ஏதோ செய்தி இருப்பதாகச் சொன்னீரே? அது என்ன?" என்று கேட்டான்.

"லக்ஷ்மணன் இராமனைப் பின் தொடர்ந்ததுபோல் மாமல்லரைத் தொடர்ந்து உங்களைப் போகும்படி சொன்னார். காஞ்சிக்குச் சக்கரவர்த்தியே சீக்கிரத்தில் வந்து கோட்டைப் பாதுகாப்பு விஷயங்களைக் கவனித்துக் கொள்வதாகச் சொன்னார்."

"ஆஹா! என் அருமைத் தோழரும் என்னுடன் வருகிறாரா?" என்று




## அத்தியாயம் 18

## விடுதலை

**வி**யர்க்க விறுவிறுக்க மூச்சு வாங்கிக்கொண்டு வந்த சத்ருக்னனின் முகத்தை மூவிரண்டு கண்கள் இமையையும் அசைக்காமல் ஆவலுடன் உற்று நோக்கின. ஆசுவாசப்படுத்திக் கொள்வதற்கு ஒரு கண நேரங்கூடக் கொடுக்காமல், "சத்ருக்னா! யாருக்கு என்ன செய்தி கொண்டு வந்தாய்?" என்று தேவி கேட்டாள்.

"தாயே! இங்குள்ள மூன்று பேருக்கும் செய்தி கொண்டு வந்திருக்கிறேன்" என்றான் சத்ருக்னன்.

மாமல்லர் துள்ளி எழுந்து, "எனக்கு என்ன செய்தி?" என்று கேட்டார்.

"குழந்தாய்! ஏன் இந்தப் பதட்டம்? சத்ருக்னன் சொல்லத்தானே வந்திருக்கிறான்?" என்றாள் அன்னை.

"தேவி! மகேந்திர பல்லவரின் முதல் செய்தி தங்களுக்குத்தான்! வீர பத்தினி என்னும் பெயருக்கு இதுகாறும் தாங்கள் உரிமை பெற்றது போல் வீரத்தாய் என்னும் பெயருக்கும் உரிமை பெறவேண்டிய காலம் இப்போது வந்து விட்டது என்று தங்களுக்குத் தெரியப்படுத்தச் சொன்னார். எட்டு மாதங்களுக்கு முன்பு அகமும் முகமும் மலர்ந்து பதியைப் போர்க்களத்துக்கு அனுப்பி வைத்ததுபோல் இன்று தங்களுடைய அருமைப் புதல்வரை அனுப்பி வைக்க வேண்டிய காலம் வந்து விட்டதாகச் சொல்லச் சொன்னார்!"

விவரிக்க முடியாத உணர்ச்சி வெள்ளம் உள்ளத்தில் பொங்க, தோள்கள் பூரித்து விம்ம, தேகமெல்லாம் ரோமாஞ்சலி உண்டாக, மாமல்ல நரசிம்மர் அன்னையின் அருகில் பாய்ந்து சென்று அவளுடைய பாதங்களைத் தொட்டுக் கண்ணில் ஒத்திக் கொண்டார்.

"குழந்தாய்! உன் மனங் குளிர்ந்ததா?" என்று அன்னை கேட்டாள்.

"அம்மா! சக்கரவர்த்தியின் விருப்பத்தை நிறைவேற்றுவீர்கள் அல்லவா? அவர் எனக்கு அளித்த விடுதலையை நீங்களும் மனமுவந்து அளிப்பீர்கள் அல்லவா?" என்று கேட்டார் மாமல்லர்.

"பொறு, குழந்தாய்! செய்தியை முழுதும் கேட்போம்!" என்றாள் தேவி.

மாமல்லர் உடனே சிறிது துணுக்கத்துடன் திரும்பி, "சத்ருக்னா! எனக்கு என்ன செய்தி கொண்டு வந்தாய்?" என்று கேட்டார்.

"நல்ல செய்திதான், பிரபு! தங்கள் மனத்திற்கு உகந்த செய்திதான். நன்றிகொன்ற பாதகனான கங்கநாட்டு மன்னன் துர்விநீதன், சளுக்க புலிகேசிக்கு முன்னால் தான் காஞ்சியை அடைந்துவிட வேண்டுமென்ற ஆசையினால் விரைந்து வந்துகொண்டிருக்கிறான். பல்லவ குலத்துக்குக் கங்கர் குலம் பட்டிருக்கும் நன்றிக் கடனையெல்லாம் மறந்துவிட்டு இந்தப்

# ஆகாச வெடி

"ஹிந்துக்கள் சுடுகாட்டில் இருபது செண்டு நிலத்தை முஸ்லிம்களுக்காக ஒதுக்க வேண்டுமென்று சேலம் முனிசிபல் கௌன்சில் தீர்மானித்திருக்கிறது."

—ஒரு செய்தி.

இறந்து போனவர்கள் சிலருடைய ஆவிகள் இந்தச் சுடுகாட்டுப் 'பாகிஸ்தானை' எதிர்த்துப் பயமுறுத்தலாம்.

★

"நாளைக்குப் பிறைச் சந்திரன் தெரிந்து, அதனால் செவ்வாய்க்கிழமை 'ஈத்' தினமாயிருந்தால் அன்று நாங்கள் சந்தித்துப் பேச முடியாது."

—ஜனாப் ஜின்னா.

காந்தி - ஜின்னா சம்பாஷணையைக் கவனிக்க வேண்டுமென்று ஆவலோடு வானத்தில் தோன்றும் பிறைச் சந்திரனுக்கு இது பெரிய ஏமாற்றமாயிருக்கலாம்!

★

"1942-ல் சென்னை மாகாணத்தின் மரணத் தொகையைக் காட்டிலும் 43ல் அதிகரித்திருக்கிறது. இதற்குக் காரணம் தெரியவில்லை." —சென்னைச் செய்தி.

சென்னை ரோடுகளில் ஓடும் இராணுவ லாரிகளைக் கேட்டால், ஒரு வேளை காரணம் தெரியலாம்.

"லார்டு கார்டு என்பவர், தான் பாலஸ்தீன் ஹைகமிஷனராகவும் தளபதியாகவும் வருவது பற்றி இன்னும் கடிதப் போக்குவரத்து நடத்திக் கொண்டிருக்கிறார்." —ஒரு செய்தி.

பெயரே கார்டு ஆனதால் கடிதப் போக்குவரத்துக்குச் சளைக்கமாட்டார் என்று நம்புகிறோம்.

★

"ஜார்ஜ் என்பது அசங்கியமான ஆங்கிலப் பெயராயிருப்பதால், தான் அதை விரும்பவில்லை என்று கூறுகிறார் ஜார்ஜ் பெர்னார்ட் ஷா." —ஒரு செய்தி.

ஆங்கிலப் பெயர் அசங்கியமாயிருப்பதையா, அல்லது தன் பெயருக்கு முன்னால் அது வருவதையா என்று அறிய விரும்புகிறோம்.

★

"யுத்தம் அக்டோபர் 17உ முடிவடையும்" என்று ஹாஸல் எல்குவி என்ற எகிப்து ஜோஸ்யர் கூறுகிறார்."

—ஒரு செய்தி.

லாரா சொல்வதையும் இந்த எகிப்து ஜோஸ்யர் சொல்வதையும் பார்க்கும்போது, "இந்த ஸெப்டம்பர் மாதம் எப்போது முடிவடையும்?" என்று தான் தோன்றுகிறது!

## வான சஞ்சாரம்

சென்ற இதழில் வெளியான "இசைத் தேன்" விமரிசனத்தில், எதிர்பாராத நகைச்சுவை ஒன்று ஏற்பட்டு ரேடியோ நேயர்கள் பலருக்குச் சிரிப்பூட்டியது என்று அறிகிறோம். திருச்சி ரேடியோ நிலையத்தில் 8உ மாலை ஸ்ரீ நடராஜசுந்தரம் பிள்ளை நாதஸ்வரம் வாசிக்கவில்லையாம்; அன்று ஹனுமத் தோடி ராகமும் வாசிக்கப்படவில்லையாம்! அன்று நாதஸ்வரம் வாசித்தவர் பிரசித்தி பெற்ற அகில உலக நாதஸ்வர சக்கரவர்த்தி ஸ்ரீ டி. என். ராஜரத்தினம் பிள்ளையாம். — இந்தப் பெயர் மாறாட்டைப் பல நேயர்கள் எடுத்துக் காட்டி நமக்குக் கடிதம் எழுதியிருக்கிறார்கள்.

மேற்படி எதிர்பாராத ஹாஸ்யத்தை, அடிக்கடி புரோகிராம் மாற்றும் ரேடியோ நிலையத்தைப் பரிகாசம் செய்வதற்காக "இசைத் தேன்" போட்டாரா, அல்லது நமது வாசகர்கள் விழித்துக் கொண்டிருக்கிறார்களா என்று பரிசோதித்துப் பார்த்தாரா என்னும் விவரம் தெரியவில்லை. இதைப் பற்றி விசாரித்துத் தெரிந்து கொண்டு வாசகர்களுக்கும் தெரியப்படுத்துகிறோம். இந்த இதழில் தாற்காலிகமாக "இசைத் தேன்" கட்டுரையை நிறுத்தி வைத்திருக்கிறோம்.

"சர்ச்சில் ஸார்! பின்லாந்துக்கும் ருஷியாவுக்கும் நடந்திருக்கும் சமாதான உடன்படிக்கையின் ஷரத்துக்கள் தெரியுமோ, இல்லையோ?"

"நம்மைக் கேட்காமலே செய்து விட்டார்கள்; இருந்தாலும், ஷரத்துக்கள் தெரியும்."

"பின்லாந்திலே ஒரு துறைமுகத்தை ருஷியர்கள் வைத்துக் கொண்டார்கள் அல்லவா? இன்னும் சில பகுதிகளையும் ருஷியர்கள் ஐம்பது வருஷக் குத்தகைக்கு வைத்துக் கொண்டார்கள் அல்லவா?"

"ஆமாம்; அதற்கும் இதற்கும் என்ன சம்பந்தம்?"

"சம்பந்தம் இல்லாமல் என்ன? அங்கே ருஷியா ஜெயித்தது; பின்லாந்து தோற்றது. ஆகையால், பின்லாந்தில் ஒரு பகுதியை ருஷியா வைத்துக் கொண்டது. இங்கே இதாலி தோற்றது; இந்தியப் படைகள் ஜயித்தன. ஆகையினால், இதாலியில் ஒரு பகுதியை இந்தியா வைத்துக் கொள்வது நியாயந்தானே?"

"அதெப்படி நியாயம் ஆகும்! இதாலியை ஜெர்மானியரிடமிருந்து விடுதலை செய்து இதாலியருக்கே கொடுப்பதாக அல்லவா சொல்லிக் கொண்டிருக்கிறோம்?"

"அப்படியானால், பர்மாவை பர்மியருக்கும் மலாய் நாட்டை மலாய் மக்களுக்கும் ஸயாமை ஸயாமியருக்கும் கொடுத்துவிடப் போகிறீர்களா, என்ன? அந்த நாடுகளில் எல்லாம் இந்தியாவுக்குப் பங்கு கொடுக்க மாட்டீர்களா, என்ன? பின்னே, அந்த நாடுகளில் எல்லாம் இந்தியப் படைகள் எதற்காகச் சண்டை போடவேண்டும்?"

"இப்படி யெல்லாம் பிறநாடுகளில் பங்கு கேட்கிறதைப் பார்த்தால், இந்தியாவைப் பற்றிக்கூடச் சந்தேகம் உண்டாகிறதே? இந்தியா இந்தியருக்கே என்றுகூடச் சொல்வீரோ?" என்று மகத்தான ஆச்சரியத்துடன் கேட்டார் சர்ச்சில்.

"சந்தேகம் என்ன? இந்த யுத்தம் முடிந்ததும் இந்தியாவிலிருந்து நீங்கள் கம்பி நீட்டிவிடப் போவதாகத்தான் தீர்ந்துபோயிருக்கிறதே? யுத்தத்திற்குப் பிறகுகூட நீங்கள் இங்கே இருப்பீர்களா என்ன?"

இப்படி நாம் கேட்டதும், மகா கனம் பொருந்திய வின்ஸ்டன் சர்ச்சில் துரை அவர்கள் திடீரென்று தரையில் விழுந்து மூர்ச்சையாகி, மறு கணம் மாயமாய் மறைந்து போனார்.

நமது காரியாலயத்தில் உள்ளும் புறமும் நானா பக்கமும் "சர்ச்சில் எங்கே?" என்ற கூக்குரல் எழுந்தது.

நமது மாண்ட்டியை 'பீல்ட் மார்ஷல்' ஆக்கிவேன்."

"ரொம்ப சந்தோஷம்! அமெரிக்கப் பிரஸிடெண்டுக்கு இன்னும் என்ன ஆறு கொடுத்தீர்கள்?"

"அதுதான் ஒருமாதிரி முன்னமே கோடி காட்டியிருந்தேனே? ஜப்பானை ஜயிக்கும் பெருமையை அமெரிக்கர்களே முழுதும் தட்டிக்கொண்டு போக விடமாட்டேன். ஜப்பானை மயானத்துக்குத் தூக்கிக் கொண்டு போகும்போது பிரிட்டனும் ஒரு தோள் கொடுத்தே தீரும் என்று தெரிவித்து விட்டேன்."

"அது தான் சரி; ஜப்பான் யுத்தத்தில் முக்கியமாக நீங்கள் எந்த இடத்தில் கலந்து கொள்வதாக உத்தேசம்?"

"சந்தேகம் என்ன? பர்மா, மலாய், ஸயாம் முதலிய இடங்களில்தான்."

"அங்கெல்லாம் நீங்களே ஜப்பானுடன் சண்டையிடப் போகிறீர்களாக்கும். சண்டை போட்டு ஜப்பானியரைத் துரத்தி அந்த நாடுகளை விடுதலை செய்யப் போகிறீர்களாக்கும்."

"ஆம்: ஜப்பானிடமிருந்து விடுதலை செய்யப் போகிறேன்."

"பெரும்பாலும் இந்தியப் போர் வீரர்களையும், இந்திய யுத்தத் தளவாடங்களையும் கொண்டுதானே?"

"ஆமாம்; அந்தப் பெருமையை இந்தியாவுக்குந்தான் பெரும்பாலும் அளிக்கப் போகிறேன்."

"சர்ச்சில் ஸார்! ஒன்று கேட்கிறேன், சொல்கிறீர்களா?"

"திவ்யமாய்ச் சொல்கிறேன். சொல்லத்தானே வந்திருக்கிறேன்?"

"பிரஸிடெண்ட் ரூஸ்வெல்ட்டும் நீங்களும் படுக்கை அறையில் கதவைத் தாள் போட்டுக்கொண்டு மூன்றும் பேர் அறியாமல் பேசிய அந்தரங்கப் பேச்சின் மர்மம் என்ன?"

"உமக்குந் தெரியாத மர்மமா? நீர் தான் சொல்லுமே?"

"சொல்லட்டுமா? அந்தப் பொல்லாத பிலிப்ஸின் கடிதம் வெளியான மர்மந்தான்!"

சர்ச்சில் புன்னகை புரிந்தார்.

"உண்டா, இல்லையா?"

அங்கீகாரத்துக்கு அறிகுறியாகச் சர்ச்சில் தலையை அசைத்தார்.

"முக்கியமாக, பிலிப்ஸ் கடிதத்தில் இந்தியப் போர் வீரர்களைப் பற்றிக் குறிப்பிட்டிருந்ததைப் பற்றிப் பித்து வாங்கினீர்கள் அல்லவா? 'இந்திய வீரர்கள் வயிற்றுச் சோற்றுக்காகப் படையில் சேர்ந்தவர்கள்' என்ற கூற்றின் மண்டையில் அடித்தீர்கள் அல்லவா?"

"அடித்தேன்; நன்றாய் அடித்தேன்."

"பிலிப்ஸ் போன்றவர்களை இராஜாங்க தூதர்களாக அனுப்புவதின் அசட்டுத்தனத்தை ரூஸ்வெல்ட்டின் மூளையில் ஏறும்படி எடுத்துக் காட்டினீர்களா?"

"காட்டினேன்."

"இந்தப் பேச்சின் போதுதானே, பூனையில் கறுப்புப் பூனையாயிருந்தால் என்ன, வெள்ளைப் பூனையாயிருந்தால் என்ன, சண்டை போடும் பூனையாயிருந்தால் சரி என்ற ஞானோதயம் உங்களுக்கு ஏற்பட்டது?"

"அப்படித்தான்."

"இந்தியப் போர் வீரர்களின் பெருமையை நிலைநாட்ட இன்னும் என்ன செய்வீர்கள்?"

"இத்தாலி போர்க் களத்துக்கு நேரில் வந்து, அங்கே இந்தியப் போர் வீரர்கள் நடத்தும் வீரப் போரைக் கண்ணால் பார்க்கச் சொன்னேன்."

"அதற்கு ரூஸ்வெல்ட் என்ன சொன்னார்?"

"நான் பார்க்க வேண்டாம்; நீர் சொன்னாலே போதும் என்றார்."

"ரூஸ்வெல்ட் வராவிட்டால் போகிறார்; நான் வருகிறேன்!" என்று கிளம்பினோம் நாம்.

"நீர் வருகிறீரா? எங்கே? எதற்கு?"

"இத்தாலிக்கு உங்களுடன் வருகிறேன்."

"என்னத்திற்கு?"

"இத்தாலியில் எந்தப் பகுதியை இந்தியாவுக்குக் கொடுக்கப் போகிறீர்கள் என்று பார்ப்பதற்கு!"

"என்ன?"

"இத்தாலியில் எந்தெந்தப் பகுதியை இந்தியா வைத்துக் கொள்ளலாம் என்று பார்ப்பதற்கு!"

"என்ன? என்ன? என்ன?"

"இத்தாலி நாட்டில் இந்தியாவுக்குச் சொந்தமாக வைத்துக் கொள்ள ரோமாபுரி தேவலையா, நேபிள்ஸ் தேவலையா, பிளாரன்ஸ் தேவலையா என்று பார்ப்பதற்கு?"

"இது என்ன கூத்து?" என்றார் சர்ச்சில்.

"கூத்தா? கூத்தைப் பற்றி நாம் பேசவில்லையே? யுத்தத்தைப் பற்றியல்லவா பேசுகிறோம்?"

"பின்னே இத்தாலி தேசத்தில் சில பகுதிகளை இந்தியாவுக்கு எப்படிக் கொடுக்க முடியும்?"

# சர்ச்சில் எங்கே?

சென்ற வாரத்திலே ஒரு நாள் அகில மனித சமூகத்துக்கும் பீதி தரக்கூடிய ஒரு கேள்வியானது உலகத்தின் நாலா பக்கங்களிலும் பாய்ந்து பிரயாணம் செய்து கொண்டிருந்தது.

“சர்ச்சில் எங்கே?” என்பதுதான் அந்தக் கேள்வி.

ஆகா! சர்ச்சில் எங்கே? “சர்ச்சில் எங்கே?” என்று கேட்கும்படியாக ஏன் நேர்ந்தது? அவர் இருக்குமிடம் தெரியாதபடி அப்படி என்ன விபரீதம் நேர்ந்தது? ஐயோ! சர்ச்சிலுக்கு ஒன்றும் காலைத் தலையை வலிக்காமல் இருக்க வேண்டுமே என்று மனித சமூகமே கவலையில் ஆழ்ந்தது.

மனித சமூகத்தின் கவலையினால் காரியம் ஒன்றும் ஆகி விடவில்லை.

“சர்ச்சில் எங்கே?” என்ற கேள்வி தந்திக் கம்பிகளிலும், கம்பியில்லாத் தந்திகளிலும், கடலின் கீழ் சென்ற கேபிள்களிலும், வான மண்டலத்து ஒலி அலைகளிலும் பறந்து கொண்டிருந்தது.

* * *

“ஹலோ! யார் அது?”

“நான்தான் பிரஸிடெண்ட் ரூஸ்வெல்ட்!”

“சர்ச்சில் எங்கே?”

“எனக்கு என்னமாய்த் தெரியும்?”

“அங்கேதானே வந்தார்?”

“இங்கிருந்து கிளம்பி விட்டாரே?”

“நிச்சயமாகவா?”

“ஆமாம்.”

“இங்கு வந்து சேரவில்லையே?”

“அடாடா! இதென்ன?”

“என்ன செய்கிறது?”

“விசாரித்துப் பாருங்கள்! அகப்பட்டதும் தெரிவியுங்கள்.”

* * *

“ஹலோ! யார் அது?”

“நான்தான் தோழர் ஸ்டாலின்.”

“சர்ச்சில் அங்கு வந்திருக்கிறாரா?”

“சர்ச்சிலா? அவர் ஏன் இங்கு வருகிறார்? வேறே வேலை இல்லையா?”

“அமெரிக்காவிலிருந்து இங்கு வந்து சேரவில்லை, அதனால்......”

“காணாமற் போனவர்களைத் தேட வேறு இடம் இல்லையா?”

“இல்லை, ஒருவேளை பின்லாந்து சமாதான விஷயமாய்......”

“பின்லாந்து விஷயம் நானே பைசல் செய்து விட்டேன்......”

“ஒருவேளை இனிமேல் அவ்விடம் வந்தால்......”

“இங்கே வரவேண்டாமென்று சொல்லுங்கள். எனக்குப் பேசச் சாவகாசமில்லை.”

டெலிபோனை ‘டக்’ என்று வைக்கும் சத்தம் கேட்கிறது.

* * *

“ஹலோ! யார் அது?”

“நான்தான் அதிர்ஷ்டம் பிடித்த சீன தேசத்து ஜியாங்-காய்-ஷேக்!”

“சர்ச்சில் அங்கு வந்தாரா?”

“அவர் இங்கே ஏன் வருகிறார்? இங்கே வந்து அவருக்கு என்ன ஆகவேண்டும்?”

“ஒரு வேளை வந்தால்?......”

“ஆகட்டும், ஆகட்டும். ஒருவேளை வந்தால் தக்க புத்தி கற்பித்து அனுப்பி வைக்கிறேன்!”

* * *

இப்படியாக நேச நாடுகளில் எல்லாம் விசாரித்த பிறகு இதாலி போர்க்களம், இரண்டாவது போர்முனைக் களம், பஸிபிக் சமுத்திரத்தில் ஜெனரல் மக்ஆர்தரின் தலைமைக் காரியாலயம் முதலிய இடங்களுக்கெல்லாம் தந்தி பறந்து கொண்டிருந்தது.

இங்கிலாந்திலிருந்து மிக மிகக் கெட்டிக்காரர்களான துப்பறியும் நிபுணர்கள் அடங்கிய ஒரு கோஷ்டி அமெரிக்காவுக்குக் கிளம்பிற்று.

கடைசியாகச் சர்ச்சிலைப் பற்றி வந்த செய்தி, அவரும் பிரஸிடெண்ட் ரூஸ்

வெல்ட்டும் படுக்கை அறையில் வெகு வெகு அந்தரங்கமாகப் பேச்சு வார்த்தை நடத்தினார்கள் என்பதுதானுகையால், மேற்படி பிரஸிடெண்டின் படுக்கை அறையிலேதான் ஏதோ மர்மம் இருக்க வேண்டும் என்று ஊகித்து, அதைக் கண்டு பிடிப்பதற்காக மேற்படி துப்பறியும் கோஷ்டி புறப்பட்டது.

சர்ச்சில் மாயமாய் மறைந்ததற்கும், இந்தியாவைப் பற்றிய பிலிப்ஸின் கடிதம் வெளியானதற்கும், ஏதோ சம்பந்தம் இருக்க வேண்டுமென்று பிரிட்டிஷ் இராஜதந்திர வட்டாரங்களில் பேசிக் கொள்ளப்பட்டது.

இதற்கிடையில், சர்ச்சில் காணமற்போன விஷயத்தை ஒருவரும் தெரிந்து கொள்ளாதபடி உலகத்தின் கண்ணிலே மண்ணைத் தூவி வைக்க வேண்டும் என்று பாக்கியுள்ள பிரிட்டிஷ் மந்திரிகள் தீர்மானித்தார்கள்.

* * *

இப்படியாக வானமும் பூமியும் அல்லோல கல்லோலப்பட்டுக் கொண்டிருந்த அதே தினத்தில், நமது காரியாலயத்திலும், "சர்ச்சில் எங்கே?" என்ற ஒரு குரல் எழுந்தது.

அந்தக் குரல் வேறு யாருடையதுமில்லை; நம்முடைய குரலேதான்.

"சர்ச்சில் எங்கே?" என்று நாம் கேட்டு வாய் மூடுவதற்குள்ளே, "இதோ வந்து விட்டேன்!" என்ற பதில் காதில் விழுந்ததும், நம்மை ஒரு அங்குல உயரம் கூடத் தூக்கிவாரிப் போடவில்லை.

எதிரே இருந்த நாற்காலியைப் பார்த்த பிறகுதான், உச்சி மோட்டுக் கூரை வரையில் நம்மைத் தூக்கி வாரிப் போட்டது.

"உங்களை நான் எதிர்பார்க்கவில்லை; எங்கள் ஆபீஸ் கறுப்புப் பூனையைப் பற்றி விசாரித்துக் கொண்டிருந்தேன்" என்றோம்.

"பூனையில், கறுப்புப் பூனையாயிருந்தால் என்ன? வெள்ளைப் பூனையாயிருந்தால் என்ன? சண்டை போடும் பூனையாயிருந்தால் சரிதான்! அது மாதிரியே மனிதர்களிலும் கறுப்பாயிருந்தாலென்ன? வெள்ளையாயிருந்தாலென்ன? எல்லாம் ஒன்றுதான்!" என்றார் சர்ச்சில்.

"ஆஹா! இப்பேர்ப்பட்ட ஞானோதயம் தங்களுக்கு எப்போது, எப்படி, யாரால் ஏற்பட்டது?" என்றோம்.

"நீர்தான் சொல்லுமே?"

"ஆஹா! ஞாபகம் வந்தது. எல்லாம் நம்மால் ஏற்பட்டதுதான். உண்மைதானே?"

"வாஸ்தவம்!"

"சர்ச்சில், ஸார்! ஒரு விஷயத்தைச் சொல்லிக் கொடுத்தால் அதைச் சட்டென்று பிடித்துக் கொள்வதில் உங்களுக்குச் சமானம் யாரும் இல்லை!"

"உண்மை!"

"சென்ற தடவை நீங்கள் இங்கே வந்திருந்தபோது, நார்மண்டி வெற்றியின் பெருமை முழுவதையும் அமெரிக்கர்களே அடித்துக் கொண்டு போகப் பார்க்கிறார்கள் என்று சொன்னேனல்லவா?"

"சொன்னீர்!"

"அது எவ்வளவு உண்மையாச்சு, பார்த்தீர்களா? அமெரிக்கப் பத்திரிகைகள் இப்போது எழுதுவதைக் கவனித்தீர்களா? 'பிரான்ஸில் அடைந்த வெற்றிகள் எல்லாம் அமெரிக்கர்களின் வெற்றி' என்பதாக 'சிகாகோ டிரிப்யூன்' கை கூசாமல் எழுதியிருப்பதைக் கவனித்தீர்களா?"

"கவனித்தேன்; மனம் கொதித்தேன். என் மனக் கொதிப்பை ரூஸ்வெல்ட்டுக்கும் கொஞ்சம் காட்டினேன். இது விஷயத்தில் எனக்கு முன்னெச்சரிக்கை செய்ததற்காக உமக்கு வந்தனம் செலுத்துகிறேன்."

"நானும் உங்களுக்கு வந்தனம் செலுத்த வேண்டும்."

"எதற்காக?"

"தளபதி மாண்ட்கோமரியின் படத்தை நமது 'கல்கி' அட்டையிலே போட்டேன். அந்த வாரத்தில் நீங்கள் அவரை 'பீல்ட் மார்ஷல்' ஆக்கினீர்கள்."

"ஆமாம், நீர் அட்டையில் போட்டதற்காகவுந்தான்; அதோடு, ஜெனரல் ஐஸன்ஹவருக்கு ஒரு பாடம் கற்பிக்கவுந்தான்."

"அதுதான் சரி; ஜெனரல் ஐஸன்ஹவர் என்ன வேலைத்தனம் செய்தார், பாருங்கள்! பிரான்ஸில் படை இறங்கும் போது, அந்தமாதிரியான அபாய வேளையில், படையெடுப்புப் படைகள் எல்லாவற்றிற்கும் நமது மாண்ட்கோமரி தலைவராயிருக்கவேண்டியிருந்தது. கொஞ்சம் ஜயம் ஏற்பட்டதும், மாண்ட்கோமரியைப் பிரிட்டிஷ் படைகளுக்கு மட்டும் தலைவர் என்று செய்து விட்டாரல்லவா?"

"அதற்காகத்தான், ஐஸன்ஹவர் வெறும் ஜெனரலாயிருக்கும்போது,

-உம்மன்







ஜப்பானை முறியடிக்கும் வேலையை முழுதும் அமெரிக்காவுக்கே விட்டுவிட முடியாது என்று சர்ச்சில் க்யூபெக்கில் கூறினார்.

இந்தியா விஷயத்தில் சமீபத்தில் ஏற்பட்ட கண்டனங்களுக்குப் பதிலாக, அதற்கெல்லாம் சர்ச்சில் தான் "பொறுப்பாளி" என்று கூறி அமெரி தப்பித்துக் கொள்ள முயன்றார்.





நிகழ்ச்சிச் சித்திரம்

எம்.ஏ.ஜின்னா
அன்னியர்கள் உள்ளே
பிரவேசிக்கக் கூடாது

ஈ.வே.ரா பெரியார் தம் திராவிடஸ்தான் திட்டத்தை எடுத்துக் கொண்டு ஜனப் ஜின்னா வீட்டுக் கதவைத் தட்டினார். ஆனால் கதவு திறக்கவில்லை!

மத்திய
மாகாண
கவர்னர் பதவி.

ஐக்கிய
மாகாண
கவர்னர் பதவி.

வட மேற்கு
மாகாண
கவர்னர் பதவி.

மத்திய மாகாணம் ஐக்கிய மாகாணம், வட மேற்கு மாகாணம், இம் மூன்று மாகாணங்களின் கவர்னர் பதவி சீக்கிரமே காலியாகப் போகிறது. எனவே, டில்லி அதிகார வர்க்கத்தாரின் நாவில் ஜலம் ஊறிக்கொண்டு இருக்கிறது.




மலர் 4 | தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 8

# என்ன சேதி?

## பக்ரீத் செய்தி

முன்னே யெல்லாம் பக்ரீத் பண்டிகை ஆன மறு தினம் தினசரிப் பத்திரிகைகளைப் பார்த்தால்,

"கல்கத்தா,

இன்று இங்கு ஈத் பண்டிகை கொண்டாடப்பட்டது. எல்லாம் அமைதியாக நடந்தது"

என்பது போன்ற செய்திகள் பத்தி பத்தியாகப் பிரசுரிக்கப்பட்டிருக்கும். சில இடங்களில் ஹிந்து-முஸ்லிம் கலவரம் நடந்த செய்திகள் காணப்படும். மொத்தத்தில் பக்ரீத் பண்டிகை வந்துவிட்டு நல்லபடியாகப் போகவேண்டுமே என்று எல்லாரும் வயிற்றில் நெருப்பைக் கட்டிக்கொண்டிருக்க நேரும்.

இந்த வருஷத்துப் பக்ரீத் செய்திகள் கொஞ்சம் வேறுவிதமாக இருக்கின்றன. அநேக ஊர்களில் பக்ரீத் பண்டிகையன்று பொதுக் கூட்டங்களில், "மகாத்மா — ஜின்னா பேச்சு வெற்றியடைய வேண்டும்" என்று பிரார்த்தனை செய்யப்பட்டது. மசூதிகளில் முஸ்லிம்களினாலும் அத்தகைய பிரார்த்தனை நடத்தப் பட்டது. மகாத்மாவுக்கும் ஜனாப் ஜின்னாவுக்கும் பல இடங்களிலிருந்து அம்மாதிரி செய்திகள் வந்தன. மகாத்மாவும் ஜனாப் ஜின்னாவும் ஒருவருக்கொருவர் வாழ்த்துச் செய்தி அனுப்பிக் கொண்டார்கள். முஸ்லிம்களுக்கு ஜனாப் ஜின்னாவும், தேசத்துக்கு மகாத்மாவும் செய்திகள் அனுப்பினார்கள். மகாத்மா அனுப்பிய செய்தியில் "நம்பிக்கைக்கு இடமில்லாமற் போனால் நாங்கள் வெறுமனே பேசிக் கொண்டிருப்போமா?" என்று குறிப்பிட்டிருக்கிறார். ஜனாப் ஜின்னா முஸ்லிம்களுக்கு அனுப்பிய செய்தியில், "பரிபூரண சுதந்திரத்துக்காகவும் பாகிஸ்தானுக்காகவும் சகல தியாகங்களையும் செய்யத் தயாராயிருங்கள்" என்று குறிப்பிட்டிருக்கிறார். மகாத்மா - ஜின்னா பேச்சினால் வேறு பயன் ஒன்றுமில்லாவிட்டாலும், ஜனாப் ஜின்னா 'பாகிஸ்தானு'க்கு முன்னால் 'பரிபூரண சுதந்திர'த்தை வைத்த பலன் ஒன்றே போதும் என்று சொல்லலாம்.

## ஒரே வாரம்

அன்னை கஸ்தூரிபா நிதியில் தங்களுடைய கைங்கரியத்தையும் சேர்க்க விரும்புகிறவர்களுக்கு இன்னும் ஒரே வாரந்தான் பாக்கியிருக்கிறது. உத்தேச திட்டத்தின்படி அக்டோபர் 2உ மகாத்மாவிடம் சேர்க்க வேண்டிய 75 லட்சம் ரூபாயும் அதற்கு மேலும் கூடச் சேர்ந்து விடும் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் தமிழ் நாடு தன் பங்குக்குக் கொடுக்க ஒப்புக்கொண்ட ஏழு லட்சம் ரூபாயைப் பற்றித்தான் சிறிது சந்தேகமாயிருக்கிறது. தேசம் கொடுக்கப்போகிற தொகையில் பத்தில் ஒரு பங்கேனும் தமிழ் நாடு கொடுக்கவில்லையென்றால், அது தமிழ்மக்கள் பெருமைப் படக் கூடிய காரியமன்று. வருகிற ஒரு வாரத்தில் பாக்கித் தொகையை இட்டு நிரப்பித் தமிழ்நாடு தன் மானத்தைக் காத்துக் கொள்ளுமென்று நம்புகிறோம்.

---

**ஐந்து ரூபாய் பரிசு:** *சென்ற இதழில் வெளியான "உபயோகம்" என்னும் காலக்ஷேபத் துணுக்குக்குப் பரிசு பெறுபவர்:* எம். கே. சவுண்டப்பன், முத்தூர், பொள்ளாச்சி.

# தமிழ் இசைச் சங்கம்



நடராஜ் - சகுந்தலா நடனம்

★

ஆண்டாள்

திருக்கல்யாணம்

— அபூர்வ நடனம் —

முதல் முறை

★

டிக்கட் விவரம்: ரூ. 5, 3, 2, 1.

26-9-44 செவ்வாய் மாலை 6-30 மணிக்கு (ஸரஸ்வதி பூஜா தினம்)

## ஸெயிண்ட் மேரீஸ் ஹாலில்

---




நவாப்

T. S. ராஜமாணிக்கத்தின்

மதுரை தேவி பால

விநோத சங்கீத

சபையாரால்

15 - 9 - 44 வெள்ளிக்கிழமை

முதல் பிரதி தினமும்

# கிருஷ்ண லீலா

## நாடகம்

★

## திருவனந்தபுரம் சித்ரா தியேட்டரில்

வெற்றிகரமாக நடைபெறுகிறது



# கல்கி
## பொருளடக்கம்



மலர் 4 }
இதழ் 8 }

1944 செப்டம்பர் 24

{ தாரண ௵
{ புரட்டாசி 9



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனையே.








மேனாடுகளிலே ஒவ்வொரு வருஷமும் அந்தந்தக் கலைத் துறையில் சிறந்து விளங்கியவர் யார் என்று வோட்டு எடுத்துத் தீர்மானிக்கிறார்கள். அப்படித் தென்னாட்டில் கர்நாடக சங்கீத வித்வான்களில் இந்த வருஷத்தில் சிறந்து விளங்கியவர் யார் என்று சங்கீத ரஸிகர்களிடையே வோட்டு எடுக்கும் பட்சத்தில், ஸ்ரீ ஜி. என். பாலசுப்பிரமண்யம் அவர்களுக்கே மிகத் திரளான வோட்டுக் கிடைக்கும் என்பதில் சந்தேகமில்லை.

இந்த உன்னதமான பதவியை ஸ்ரீ ஜி. என். பி. எளிதில் அடைந்து விடவில்லை. பி. ஏ. ஆனர்ஸ் பாஸ் செய்துவிட்டுச் சங்கீதத் துறையில் புகுந்ததிலே அவருடைய சங்கீத ஆர்வம் நன்கு ஸ்தாபிதமாயிற்று. பிறகு, ஏறக்குறையப் பத்து வருஷ காலம் சங்கீதத் துறையில் பாடுபட்டுப் போராடினார். மக்கர் செய்த சரீரத்தை அபார சாதகத்தினால் தம் இஷ்டப்படி பொம்மை பேசும்படி செய்து கொண்டார். பிர்க்கா மயமாயிருந்த சங்கீத பாணியைத் திருத்தி அழகான, அமைப்பான சங்கீத பாணியாக்கிக் கொண்டார். இந்தப் பெரு முயற்சிகளின் பலனாக இன்று ஜி. என். பி. உன்னத ஸ்தானத்தை அடைந்திருக்கிறார். இதே ஸ்தானத்தில் இன்னும் வெகு காலம் அவர் நீடித்து நின்று மேலும் மேலும் தமது புகழை வளர்த்துக் கொள்வார் என்று ஆசையுடன் எதிர்பார்க்கிறோம்.

# நீங்கள் சாப்பிடும் ஒவ்வொரு பதார்த்தமும் ஊக்கம் அளிக்கின்றனவா?




ஒவ்வொரு ஸ்திரீயும் எந்த பதார்த்தங்கள் ஊக்கமளிக்கக் கூடியவை என்பதை அறிந்திருக்க வேண்டும். டால்டா "குக்-புக்" (ஆங்கிலத்தில் மட்டும்) உணவுப்பொருள்களின் தராதரத்தைப் பற்றியும், 150 இந்திய ஆகாரத் திட்டங்களைப் பற்றியும் விவரித்திருக்கிறது. Dept. D133 P.O. Box No. 353 Bombay என்ற விலாசத்திற்கு 4 அணா ஸ்டாம்ப் அனுப்புங்கள்



ஆம்; அளிக்கின்றன உணவு ஊக்கமளிக்கிறது! ஆனால் எல்லா உணவும் வேண்டிய அளவிற்கு ஊக்கமளிப்பதில்லை. சில அதிகமும், சில குறைவாகவும் அளிக்கின்றன. இங்குதான் ஆரோக்கியத்திற்கு அபாயமிருக்கிறது. நமக்குப் பிரியமான சில உணவுகளில் ஊக்கமளிக்கக்கூடிய சக்தி குறைவாக இருப்பதால் இவ்வுணவுகளிலிருந்து ஊக்கத்தை எதிர்பார்க்கும் ஜனங்கள் விளையாட்டிலோ, வேலையிலோ வெகு சீக்கிரம் களைப்படைகிறார்கள். எல்லா உணவுகளையும் அதிக சக்தி கொடுக்கக் கூடியவைகளாக செய்யலாம்—வைடமின் நிறைந்த டால்டாவினால் சமையல் செய்வதால் இயற்கை தரக்கூடிய சக்திப் பொருளையும் அநேக உணவுகளிலில்லாத சத்துக்களையும் டால்டா தருகிறது. நீங்கள் சாப்பிடும் உணவுகளுக்கு அதிக ஊக்கத்தையும் கொடுக்கிறது.

**வைடமின் நிறைந்த டால்டா ஊக்கமளிக்கிறது.**




# P. A. ராஜ செட்டியார் பிரதர்

தந்தி: ராஜா - கோயமுத்தூர் - போன். 218A

---

# கலியாண காலத்திற் கென்று

புதுமாதிரி புடவைகளும், இதர ஜவுளி தினுசு
களும் ஸ்பெஷலாக தருவிக்கப்பட்டிருக்கின்றன!

ஒவ்வொன்றுக்கும், கெட்டிச் சாயத்திற்கும், நீண்ட
உழைப்பிற்கும் தங்கு தடையில்லா உத்திரவாதம் உண்டு!

**புடவைகள்:**—எமது சொந்தத் தறியில் கொள்ளேகால் முறுக்குப் பட்டில் தயார் செய்யப்பட்ட நேர்த்தியான பார்டர்கள் புது மாதிரி ரம்யமான முகதலைக ளுடன் கூடிய 6, 7, 8, 9 கெஜம் சேலைகள், பாவாடைகள் முதலியன.

**பெங்களூர் பட்டுச் சேலைகள்:**—ஏராளமான நூதன ரகங்கள், சேலைகள் பாவாடைகள், ரவிக்கைகள் இன்னும் அநேக ஜெக்கட் வில்லைவகையராக்கள்

சரசமான விலையில் சகலரும் வாங்கி உடுத்தக்கூடிய நூல் சேலைகள், பாவாடைகள் வேஷ்டிகள், துப்பட்டாக்கள், தற்சமயம் ஏராளமாய் கைவசம் குவிந்துள்ளன!

நேரில் வந்து பாருங்கள்!

மதுரை ஆபீஸ்:
230, கீழ்மாசி வீதி,
மதுரை.
போன்: 36 Tel: "YESARBIKAY"

**SRB**

மதராஸ் ஆபீஸ்:
83, நைனியப்ப நாய்க்கன் தெரு,
மதராஸ்.
Tel: "RENOWN" போன்: 3506

## S. R. B. குப்புசாமி அய்யர் & சன்

(FORMERLY S. R. பாலுசாமி அய்யர் & சன்ஸ்)

பிரபல மதுரை, பனாரஸ் ஜவுளி வியாபாரிகள்.



ண்டைய நாட்களில் மொகலாய சக்கரவர்த்திகளின் கொலு மண்டப ஆரணங்குகள் காலைக் கதிரவனின் இளங் கதிரொளியில் ஆளிமார்கள் சூழ தங்களுக் கென்றேயுள்ள சிங்காரக் குளிர் பொய்கைகளில் நறுமணங் கமழும் தைலங்கள் தேய்த்து நீராடி வந்தனர். தங்களது அழகிய மேனியை சுத்தம் செய்வதற்கு அன்று அவர்கள் க்ஷார மண்ணை உபயோகித்து வந்தார்கள்! ஏனெனில், அந்நாளில் ஸோப்புகளே கிடையாது.

இன்றோவெனில், சகல சுக சௌகரியங்களும் பொருந்தியமைந்துள்ள ஹமாம் தானிருக்கிறதே - ஹமாமின் நுண்ணிய ஏராள நுரை தேகத்தை நன்கு சுத்தம் செய்வதோடு பண்டைய ஜனங்கள் கனவிலும் அனுபவித்தறியாத ஓர் அலாதி இன்பத்தையும் அளிக்கிறது.



# ஹமாம்

உங்கள் ஸ்நானத்திற் குகந்த பெரிய ஸோப்பு

டாய்லெட் விற்பனை இலாகா:

13, வாணியர் தெரு, த. பெ. நெ. 31, மதராஸ்.




ஸ்ரீ டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட், டாடாபுரம், பம்பாய்

# கொலம்பியா
## வெளியீடு
# பூம்பாவை
## டாக்கி பாட்டுகள்



**U. R. ஜீவரத்னம்**

GE. 6166 :—
காணிக்கையாக
ஆடிடும்.......

GE. 6167 :—
வாசமிகும்.....
போதும் போதும்

GE. 6168 :—
காலம் வீண்போகுதே
வருமாம்..........



**K. R. ராமசுவாமி**

GE. 6169.
ஆனந்தம்
ஓம் நமசிவாயம்




## ஸரஸ்வதி ஸ்டோர்ஸ், மதராஸ்.

G. RAO

மேற்கண்ட ரிகார்டுகள் எங்களிடம் கிடைக்கும்

முகம்மது இப்ராஹிம் & கம்பெனி, சென்னை. S. கண்ணன் & கம்பெனி, திருச்சிராப்பள்ளி,
V. S. ராஜகோபாலன் கம்பெனி, சென்னை, பங்களூர், சேலம், கோயமுத்தூர்.
M. A. இருதயசாமி & கம்பெனி, உதகமண்டலம்.

பூண்டவன், தொடர்ந்துபின் னே
போந்தவன், பொழுதுநீந் த(து)
யாண்(டு)?' என இனிதுகேட் டான்,
எயினர்கோன் இதனைச்சொன் னான்.

[தூண்தர நிவந்த : தூண்போல் உயர்ந்த; தோளான் : பரதன்தான்; நீண்டவன் : ராமன்; துயின்ற சூழல் : படுத்திருந்த இடம்; திமிர்ந்த தேயம் பூண்டவன், தொடர்ந்து பின்னே போந்தவன் : அந்தத் தம்பி லக்ஷ்மணன்; பொழுது நீந்தது யாண்டு : இராப்பொழுதை எங்கே இருந்து கழித்தானோ; எயினர்கோன் : வேடர்களுக்கு அரசனான குகன்]

முரட்டு கபாலமுடைய எயினர் கோன் சொல்லுகிறதைப் பார்ப்போம்:

இருளே பழுத்ததோ என்று சொல்லும்படியான அழகிய ராமனும் சீதையும் அந்தக் கல்லின் மேல் விரித்த புல்லில் படுத்துத் தூங்கினார்கள். ஆம்; தூங்கி விட்டார்கள். இனி லக்ஷ்மணனைப் பற்றிச் சொல்லுகிறேன் கேள்.

'அல்லையாண் டமைந்தமே னி
அழகனும், அவளும்துஞ் ச,
வில்லையூன் றியகையோ டும்
வெய்துயிர்ப் போடும்வீ ரன்,—
கல்லையாண்(டு) உயர்ந்ததோ ளாய்!
கண்கள்நீர் சொரியக்,கங் குல்
எல்லைகாண் பளவும்நின் றான்,
இமைப்பிலன் நயனம்' என் றான்.

[அல்லை யாண்டு அமைந்தமேனி : இருளைக் கனிவித்துச் செய்ததுதானோ மேனி என்னும்படியாக; அழகனும் அவளும் துஞ்ச : ராமனும் அவனது அழகுக்கு ஒத்த சீதையும் தூங்க; வெய்துயிர்ப் போடும் : பெருமூச்சோடும்; வீரன் : லக்ஷ்மணனானவன்; கல்லை யாண்டு உயர்ந்த தோளாய் : கல்லை போன்ற நெடுந் தோளுடைய பரதனே,— கேட்பாயாக; கங்குல் எல்லை : இரவின் எல்லை அதாவது விடியற் காலம்; இமைப்பிலன் நயனம் : கண் மூடவில்லை.]

லக்ஷ்மணன் இந்த விதமாகக் கண்ணீர் விட்டுக் கொண்டு காத்து நின்றான் என்று சொன்னதைக் கேட்ட பரதனது மனதின் வியப்பு, துயரம், அவமானம் எல்லாம் சேர்ந்து ஒரு தனி உணர்ச்சியாய்ப் பொங்குகிறது.

என்பதனைக் கேட்டமைந் தன்,
'இராமனுக்(கு) இளையார்என் று
முன்(பு)ஒத்த தோற்றத்தே யில்,
யான்என்றும் முடிவிலா த
துன்பத்துக்(கு) ஏதுவா னேன்,
அவன்அது துடைக்கநின் றான்,—
அன்பத்துக்(கு) எல்லையுண் டே!
அழகி(து)என் அடிமை!' என் றான்.

[என்பதனைக் கேட்ட மைந்தன் : குகன் சொன்னதைக் கேட்ட பரதன்; முன்பு ஒத்த தோற்றத்தேயில் : தம்பிகள் என்று ஒத்து வரும்படி பிறந்த எங்களில்; அவன் அது துடைக்க நின்றான் : அந்த லக்ஷ்மணன் ராமனது துன்பத்தை நீக்குகிறதற்கு என்று இருக்கிறான்; அன்பத்துக்கு எல்லையுண்டோ : அன்பு என்னும் தத்துவத்துக்கு வரம்பு ஒன்று உண்டா, கிடையாது; 'அழகு இது என் அடிமை' என்றான் : என்னத்தைச் சொல்ல என் அன்பை என்று நொந்து கொள்ளுகிறான்.]

தன்னால் வந்த துன்பம் அளவில்லாதது என்று நொந்து கொள்ளுகிறான் பரதன். அடுத்தாற்போல் வியக்கிறான்; லக்ஷ்மணனது அன்பு அளவில்லாதது என்பதாக. இந்த அரிய பாவத்தைச் செய்யுளின் ஓசை அபூர்வமாக எடுத்துக் காட்டுகிறது. தயவு செய்து மறுமுறை பாடிப் பார்க்கவேண்டும்.



வாழைத் தோப்புக்களும் கண்ணைக் குளிர்விக்கும் பசுமையான காட்சி யளித்தன.

பெரு மழை பொழிந்து விட்டுப் பல நாள் ஆகிவிட்டதாயினும், வானத்தில் இப்போதும் மேகத் திரள்கள் காணப் பட்டன. அவை, இடையில் தங்குவதற்கு நேரமில்லாத நெடுந்தூரப் பிரயாணிகளைப் போல் ஆகாயத்தில் அதி வேகமாகப் பிரயாணம் செய்தன. சில சமயம் சில நீர்த்துளிகளை அள்ளித் தெளித்து விட்டு அவை சிதறி மறைந்தன.

நீர் நிலைகளின்மீது தவழ்ந்தும், பசுமையான தோப்புக்களில் புகுந்தும், மழைத் துளிகளை அளாவியும் வந்து கொண்டிருந்த குளிர்ந்த வாடைக் காற்று உடம்பின்மீது பட்டபோது, துணியை இழுத்துப் போர்த்திக் கொள்ளத் தோன்றியது; ஆயினும் வெகு சுகமாயிருந்தது.



அந்தக் குளிர்ந்த வாடைக் காற்றில் அடிபட்டதினால் பட்சிகளுக்குக்கூடத் தொண்டை கட்டிக்கொண்டதுபோல் தோன்றியது. சாதாரணமாய் 'கல கல' வென்றும் 'கிளு கிளு' வென்றும் கேட்கும் புள்ளினங்களின் குரல் ஒலி, இப்போது 'கர கரப்பு'ச் சத்தம் கலந்து காதில் விழுந்தது.

* * *

வண்டியில் அத்தைக்கும் மருமகளுக்கும் பின்வருமாறு சம்பாஷணை நடந்தது.

"இன்றைக்கு மழை பெய்யுமா, சிவகாமி!" என்று அத்தை கேட்டாள்.

"மலையா? எங்கே இருக்கிறது?" என்றாள் சிவகாமி.

"ஆமாம்; மழையைக் கண்டால் மயிலுக்குக் கொண்டாட்டந்தான்!" என்றாள் அத்தை.

"ரதிக்குக் கொண்டாட்டத்துக்கு என்ன கேடு?" என்றாள் சிவகாமி.

"என்ன சொன்னாய்?" என்றாள் அத்தை.

"என்ன கேட்டீர்கள்?" என்றாள் சிவகாமி.

கொஞ்சம் செவி மந்தமுள்ள அத்தைக்குப் பேசுவதிலே அதிகப் பிரியம். எனவே, அவ்வப்போது சிவகாமியிடம் ஏதாவது கேட்டுக் கொண்டும் சொல்லிக் கொண்டும் வருவாள். அந்தப் பேச்சுக்களை மனதில் வாங்கிக் கொள்ளாமலேயே சிவகாமி ஏதாவது மறுமொழி சொல்வாள். அது காதில் நன்றாய் விழாமல் அத்தை வேறு ஒன்றைக் கூறுவாள். இதே ரீதியில் அவர்களுடைய பிரயாணம் நாலு தினங்களாக நடந்துகொண்டிருந்தது. காஞ்சியிலிருந்து ஏறக்குறைய ஆறு காத தூரம் அவர்கள் சிதம்பரம் போகும் சாலையில் பிரயாணம் செய்திருந்தார்கள்.

* * *

அந்த மாரி காலத்து மாலைப் பொழுதில் வெளி உலகமானது எவ்வளவுக்குக் குளிர்ந்திருந்ததோ, அவ்வளவுக்குச் சிவகாமியின் உள்ளம் கொதித்துக் கொண்டிருந்தது. அதில் தீ மலை நெருப்பைக் கக்கிக் கொண்டிருந்தது. கொழுந்து விட்டெரியும் ஜுவாலைகளுடனே அக்கினி ஆறு பிரவகித்துக் கொண்டிருந்தது.

நல்ல வேளையாக அவர்கள் இந்த யாத்திரை கிளம்பினார்கள். வழிப் பிரயாணத்தில் புதிய புதிய இடங்களைப் பார்த்ததினாலும், புதிய புதிய காட்சிகளில் அவ்வப்போது கருத்தைச் செலுத்தியதினாலும், இடையிடையே சிவகாமிக்குச் சிறிது நிம்மதி ஏற்பட்டு வந்தது. இல்லாவிட்டால் இதற்குள்ளாக அவளுக்குச் சித்தப் பிரமை ஏற்பட்டிருந்தாலும் ஏற்பட்டிருக்கும்.

மாமல்லரைப் பற்றி நாகநந்தி பிக்ஷு கூறிய விஷயங்கள் அவளுடைய மனதில் அத்தகைய பிரளயக் குழப்பத்தை உண்டு பண்ணியிருந்தன.

நமக்கு வேண்டியவர்களைப் பற்றி, நமது அன்புக்குரியவர்களைப் பற்றிச் சாதாரணமாக ஏதேனும் கெடுதலான விஷயத்தைக் கேள்விப்பட்டால் நமது உள்ளம் சுலபத்தில் நம்புவதில்லை. "அப்படியெல்லாம் இராது" என்று மனதைத் திருப்தி செய்து கொள்கிறோம். அவதூறு சொல்கிறவர்களிடம் சண்டை பிடிக்கவும் ஆயத்தமாயிருக்கிறோம்.

ஆனால் எக் காரணத்தினாலாவது நமக்கு வேண்டியவர்களிடம் குற்றம் இருக்கிறதென்று நம்பும்படி நேர்ந்துவிட்டால், உள்ளத்தில் கோபம் கொழுந்து விட்டெரியத் தொடங்குகிறது. வேண்டியவர்கள் மீது மட்டுமல்ல; நம் மீதே கோபம் உண்டாகிறது; உலகத்தின் மேலேயே கோபங் கொள்கிறோம்.

இந்த மனித இயற்கை காதலர்களின் விஷயத்தில் ஒன்றுக்கு நூறு மடங்கு ஆகிவிடுகிறது.

காதலன் எவனும் தன்னுடைய காதலியைச் சாதாரண மானிடப் பெண்ணாகக் கருதுவதில்லை. தெய்வப் பிறவி என்றே கருதுகிறான். தேவலோகத்திலே அமிர்த பானம் செய்து கொண்டு ஆனந்த அமர வாழ்க்கை நடத்த வேண்டியவள் தன் பேரில் கொண்ட அன்பினாலே இந்தப் பூலோகத்திலே வாழ்ந்து வருவதாகக் கருதுகிறான்.

காதலியோ, குழந்தைப் பிராயத்திலிருந்து தன் மனத்தில் தானே சிருஷ்டி

செய்து கொண்டிருந்த இலட்சிய புருஷனுக்குரிய சகல உத்தம குணங்களையும் காதலன் மீது ஏற்றி அவனைக் குற்றங் குறையே யில்லாத தெய்வீக புருஷனாகவே எண்ணிக் கொள்கிறாள்.

இந்த எண்ணத்துக்கு மாறாக யார் எது சொன்னாலும் காதலர்களின் மனதில் ஏறுவதில்லை.

ஆனால், ஏதாவது ஒரு காரணத்தினால் அவர்களுடைய நம்பிக்கைக்குப் பங்கம் ஏற்படும்போது, மகத்தான ஏமாற்றம் உண்டாகி விடுகிறது. மலையின் சிகரத்திலிருந்து திடீரென்று அதல பாதாளத்தில் விழுகிறவர்களைப் போல் ஆகிவிடுகிறார்கள்.

சிவகாமி தன் இருதயத்தில் ஓர் அற்புதமான திருக்கோயிலை அமைத்து, அதிலே மாமல்ல நரசிம்மரைத் தெய்வங்களுக்கெல்லாம் மேலான பர தெய்வமாகப் பிரதிஷ்டை செய்திருந்தாள்.

நாகநந்தி கூறிய நஞ்சு தோய்ந்த வார்த்தைகளினால் அந்தத் திருக்கோயில் ஒரு நொடியில் இடிந்து தகர்ந்து விழுந்து விட்டது! அதிலே பிரதிஷ்டை செய்திருந்த தெய்வச் சிலையும் விழுந்து நொறுங்கிப் பொடிப் பொடியாய்ப் போய்விட்டது!

குமார சக்கரவர்த்தியைப் பற்றி நாகநந்தி கூறிய அவதூறு அவ்வளவு பொருத்தமாக இருந்தபடியால், சிவகாமி அவர் கூறியது அவ்வளவையும் அப்படியே நம்பிவிட்டாள். இராஜ்யத்திலே அவ்வளவு பெரிய யுத்தம் நடந்து கொண்டிருக்கும் போது, மாமல்லர் காஞ்சிக் கோட்டைக்குள்ளேயே ஒளிந்து கொண்டிருப்பதற்கு வேறு காரணம் என்ன இருக்க முடியும்?

போர்க்களத்திலே பரஞ்சோதியின் வீரதீரச் செயல்களைப் பற்றிய வரலாறுகள் காற்றிலே மிதந்து ஆயனரும் சிவகாமியும் வசித்த காட்டுக்குள்ளே கூட எட்டியிருந்தன. அதெல்லாம் உண்மை என்பதைப் பரஞ்சோதியை நேரிலே பார்த்துச் சிவகாமி தெரிந்து கொண்டிருந்தாள். தமிழ் படிக்கவும் சிற்பம் கற்கவும் வந்த பட்டிக்காட்டுப் பிள்ளை இப்போது பெரிய தளபதி ஆகிவிட்டான். அரங்கேற்றத் தன்று அவன் யானைமீது வேல் எறிந்து தங்களைக் காப்பாற்றிய சம்பவமும் சிவகாமியின் உள்ளத்தில் அழியாதபடி பதிந்திருந்தது. எனவே, பரஞ்சோதியின் வீர வாழ்க்கையோடு மாமல்லர் கோட்டைக்குள்ளே ஒளிந்திருந்ததை ஒப்பிட்டுப் பார்த்த போது, மாமல்லரைப் "பயங்கொள்ளிப் பல்லவன்" என்று நாடு நகரமெல்லாம் அழைப்பதில் வியப்பில்லை என்று சிவகாமி எண்ணினாள். இதனால், நாகநந்தியின் வார்த்தைகளில் அவளுக்குப் பூரண நம்பிக்கை ஏற்பட்டது.

ஒரு விஷயத்தில் நம்பிக்கை ஏற்பட்ட பிறகு, அதையொட்டிய இன்னொன்றிலும் நம்பிக்கை பிறப்பது இயல்பேயல்லவா? எனவே, மாமல்லரை "ஸ்திரீ லோலர்" என்று நாகநந்தி கூறியதிலும் அவளுக்கு நம்பிக்கை ஏற்பட்டிருந்தது. வீர மன்னர்களுக்குப் பிறந்த தூர்த்தர்களான இராஜ குமாரர்களைப் பற்றி அவள் கதைகளிலே கேள்விப்பட்டதுண்டு. மாமல்லர் அவர்களிலே ஒருவர் என்று அவள் கனவிலும் நினைத்ததில்லை. ஆனால், அதுவும் உண்மையாகத்தானிருக்கவேண்டும் என்று இப்போது தோன்றியது. இல்லாவிடில், இந்த ஏழைச் சிற்பியின் மகளைத் தேடி அவர் ஏன் அடிக்கடி வந்திருக்க வேண்டும்? ஆஹா! மாய வார்த்தை பேசி ஏழைப் பெண்களைக் கெடுப்பதிலே அவர் கைதேர்ந்தவராயிருக்க வேண்டும்! கள்ளங் கபட மறியாத தன்னிடம் என்னவெல்லாம் சொல்லி ஏமாற்றினார்? பல்லவ சாம்ராஜ்யத்தின் சிம்மாசனத்திலேயே தன்னை ஏற்றி வைத்து விடுகிறவர் போல அல்லவா பசப்பினார்? ஆகா! புருஷர்கள்தான் எவ்வளவு நயவஞ்சகர்கள்? அதிலும், இராஜ குலத்தினர் எப்பேர்ப்பட்ட ஈவிரக்க மில்லாத கிராதகர்கள்!

வழிப் பிரயாணத்தின் போது இந்த மாதிரி எண்ணங்கள் சிவகாமியின் உள்ளத்தில் அடிக்கடி தோன்றி நரக வேதனை யளித்தன.

சில சமயம் அவளுக்கு, தன்னுடைய மனோ ராஜ்யத்திலே ஆசையுடன் நிர்

மாணித்து வந்த இன்ப வாழ்க்கையாகிய கோட்டை இடிந்து தூளாகி விட்டபடியால். இனிமேல் தன் வாழ்க்கை என்றென்றைக்கும் சோக மயமாகவே இருக்கும் என்று தோன்றியது.

மாரிகாலத்து மாலை நேரத்தில் வானத்தில் சிதறி ஓடிய மேகங்கள் சில மழைத் துளிகளை உதிர்த்து விட்டுப் போகும்போது. தன்னுடைய கதிக்காக உலகமே கண்ணீர் வடிப்பதாக அவள் எண்ணினாள்.

இந்த ஒரு வாழ்க்கை மட்டுமல்ல; இதற்கு முன்னர் எத்தனை எத்தனையோ ஜன்ம ஜன்மாந்தரங்களிலும் தன்னுடைய வாழ்க்கை இப்படியே சோக மயமாயிருந்ததாகத் தோன்றியது.

ஆனால், இரவில் எங்கேயாவது தங்கியிருந்துவிட்டுக் காலையில் மறுபடியும் பிரயாணம் தொடங்கும் போது, ஜகஜ்ஜோதியாகச் சூரியன் உதயமாகி மரக்கிளைகளில் தங்கியிருக்கும் நீர்த்துளிகளையெல்லாம் வைரமணிகளாக ஒளி வீசச் செய்யும் போது, சிவகாமி சிறிது உற்சாகம் கொள்வாள்.

மாமல்ல நரசிம்மர் பயங்கொள்ளி தூர்த்தர் என்று ஏற்பட்டதன் பொருட்டுத் தன் வாழ்க்கையை எதற்காகப் பாழாக்கிக் கொள்ள வேண்டும் என்று கருதுவாள். உலகம் எத்தனையோ விஸ்தாரமானது; பல்லவ ராஜ்யத்துக்கு அப்பாலும் உலகம் இருக்கத்தானே செய்கிறது? தன்னிடம் அற்புதமான நாட்டியக் கலையும் இருக்கிறதல்லவா? அந்தக் கலையைப் பார்த்து அநுபவித்து ஆனந்தமடைய நாகநந்தி சொல்வது போல், உலகம் காத்திருக்கிறதல்லவா? எதற்காகத் தன் வாழ்க்கை பாழாகி விட்டதாக எண்ணிக் கொள்ள வேண்டும்? ஒரு பயங்கொள்ளித் தூர்த்தனின் காதல் பொய்யாய்ப் போய்விட்டதே என்பதற்காகத் தான் ஏன் நிரந்தரமான சோகக் கடலில் மூழ்கி விட வேண்டும்?.........

இவ்விதம் எண்ணிச் சிவகாமி உற்சாகம் அடையப் பார்ப்பாள். தூர தூர தேசங்களிலே, பெரிய பெரிய சபைகளிலே தான் நாட்டியம் ஆடுவது போலவும், கணக்கற்ற ஜனங்கள் கண்டு களித்துத் தன்னைப் பாராட்டி உபசரிப்பது போலவும் கற்பனை செய்து பார்ப்பாள்.

உண்மையில், இத்தகைய மனோபாவத்துடனே தான் சிவகாமி தன் தந்தையைப் பெரிதும் தூண்டி, வற்புறுத்தி நாகநந்தி பிக்ஷுவின் யோசனையை ஒப்புக் கொள்ளச் செய்தாள். அதன் பேரிலேதான் இந்தப் பிரயாணம் அவர்கள் தொடங்கினார்கள்.

ஆனால், என்னதான் மனத்தை வேறு விஷயங்களில் செலுத்திப் பார்த்தாலும், எவ்வளவுதான் பிரயத்தனம் செய்து உற்சாகம் கொள்ளப் பார்த்தாலும், அது சாத்தியமாகவில்லை. அவ்வப்போது குமுறிக்கொண்டு வந்த வேதனை உணர்ச்சியை மாற்ற முடியவில்லை. பொங்கி எழுந்த ஆத்திர நெருப்பை அணைக்க முடியவில்லை.

முக்கியமாக, அந்தி மயங்கி நாலாபுறமும் இருள் சூழ்ந்து வந்த நேரங்களில் சிவகாமியினுடைய உள்ளத்தில் வேதனையும் துயரமும் கணக்கின்றிப் பெருகின.

* * *

அன்று சாயங்காலம் அவ்வாறு சோகத்தில் ஆழ்ந்த உள்ளத்துடன் கட்டை வண்டியில் பிரயாணம் செய்து கொண்டிருந்தபோது, அவளுடைய நினைவை வேறு பக்கம் திருப்பும் படியான சம்பவம் ஒன்று நேர்ந்தது.

சாலையில் அவர்களுக்கெதிரே ஒரு பெரும் படை வந்து கொண்டிருக்கிற தென்பதற்கு அறிகுறிகள் தென்பட்டன.

சங்கு, கொம்பு, தாரை, தப்பட்டை, பேரிகை, எக்காளம், சமுத்திரகோஷம் முதலிய வாத்தியங்களின் பேரொலியும், அநேக குதிரைகளும் மனிதர்களும் நடந்து வரும் காலடிச் சத்தமும், அவர்களுடைய பேச்சொலியும், போர் முழக்கங்களின் ஒலியும் கலந்த பேரிரைச்சல் நிமிஷத்துக்கு நிமிஷம் நெருங்கி வந்து கொண்டிருந்தது. சற்று நேரத்துக்கெல்லாம், முன்னணிப் படை வீரர்கள் அவர்களின் கண்ணுக்குத் தென்படலாயினர்.

வியாசர் விருந்து



# அகஸ்தியர்

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

**பா**ண்டவர்கள் அருச்சுனனைத் தவம் செய்ய அனுப்பிவிட்ட பிறகு ஒரு நாள் லோமசர் என்கிற பிரம்மரிஷி அவர்களைக் காண வந்தார். இந்திரப் பிரஸ்தத்தில் யுதிஷ்டிரனைப் பூஜித்து வந்த பிராமணர்களின் கூட்டம் வனவாசத்திலும், கூடவே இருந்துகொண்டு வந்தது. இது ஒருவிதத்தில் கஷ்டமாகவே இருந்தது. "லகு பரிவாரமானால்தான் இஷ்டப்படி பிரயாணம் செய்ய முடியும். இந்தப் பரிவாரத்தைக் குறைத்துக் கொண்டு தீர்த்த யாத்திரை செய்யுங்கள்" என்று லோமச முனிவர் சொன்னதை ஒப்புக்கொண்டு யுதிஷ்டிரன் அனைவருக்கும் தெரியப்படுத்தி விட்டான்: "ஆயாசம் தாங்க மாட்டாதவர்களும் நல்ல போஜனம் விரும்பிச் சமையற்காரனை அண்டி நிற்பவர்களும் ராஜ பக்தியை மட்டும் முன்னிட்டு வந்திருப்பவர்களும் எல்லாரும் திருதராஷ்டிர மகாராஜாவைப் போய் அடையலாம். அவர் ஆதரிக்காவிட்டால் பாஞ்சால ராஜன் துருபதனிடம் போகலாம்" என்று சமாதானப்படுத்தித் தன் பரிவாரத்தைச் சுருக்கிக் கொண்டான்.

பிறகு பாண்டவர்கள் புண்ணிய க்ஷேத்திரங்களுக்கு யாத்திரை போனார்கள். அங்கங்கே அவர்கள் கண்ட இடங்களின் பூர்வ கதைகளைக் கேட்டுக் கொண்டே சென்றார்கள். இவ்வாறு சொல்லப்பட்ட கதைகளில் அகஸ்தியர் கதை ஒன்று.

* * *

**அ**கஸ்தியர் ஒரு சமயத்தில் சில பித்ருக்கள் தலைகீழாகத் தொங்கிக் கொண்டு துன்ப நிலையில் இருப்பதைக் கண்டார். "நீங்கள் யார்? ஏன் இந்தக் கடுமையான தவம் புரிகிறீர்கள்?" என்று அவர் கேட்டதற்கு அந்த ஜீவன்கள், "மகனே! நாங்கள் உன்னுடைய முன்னோர்களாவோம். நீ விவாகமில்லாமலிருப்பதால் உனக்குப் பின் எங்களுக்குப் பிண்டம் தருபவர்கள் இல்லாமல் போவார்கள். அதற்காக இந்தத் தவம் செய்கிறோம். நீ புத்திர சந்தானம் பெறுவதற்கு வழி தேடினாயானால் நாம் இந்த நரகத்திலிருந்து தப்புவோம்" என்றார்கள்.



இதைக் கேட்ட அகஸ்தியர் விவாகம் செய்து கொள்ளத் தீர்மானித்தார்.



"ஏண்டா சாம்பு! படிக்கிறபோதுதான் என்னைக் காப்பி அடித்தாய் என்றால் பெரியவனான பிறகுகூட என்னைப் பார்த்துக் காப்பி யடித்துக் கொண்டிருக்கிறாயே?"

விதர்ப்பதேசத்து அரசன் தனக்குக் குழந்தை உண்டாக வில்லை யென்று துயரப்பட்டுக் கொண்டிருந்தான். அதற்காக அவன் அகஸ்தியரை வணங்கி முனிவருடைய ஆசியைக் கேட்டான். அவரும் "உனக்கு ஒரு மகள் உண்டாவாள். அவளை எனக்கு மனைவியாகத் தருவாயாக" என்று சொல்லி அரசனுக்கு வரம் தந்தார். உலகத்திலுள்ள ஸ்திரீ லக்ஷணங்களை யெல்லாம் சேர்த்து மிக்க சௌந்தரிய ரூபத்தை மனதில் நிருமாணித்துக் கொண்டு அரசனுக்கு அகஸ்தியர் இந்த வரம் தந்தார். அரசனுடைய பாரியையும் கருப்பம் தரித்துப் பெண் குழந்தையைப் பெற்றாள். குழந்தையின் பெயர் லோபாமுத்திரை. லோபாமுத்திரை அகஸ்தியர் மனத்தில் கற்பனை செய்துகொண்ட லக்ஷணங்களுடன் நிகரற்ற அழகு வாய்ந்தவளாக வளர்ந்து விவாகத்துக்குத் தகுந்த பருவம் அடைந்தாள். அவளுடைய ரூப லாவண்ணியம் க்ஷத்திரிய உலகத்தில் பிரசித்தியா யிருந்தாலும் அகஸ்தியருக்குப் பயந்து எந்த ராஜகுமாரனும் அவளை வரிக்க வரவில்லை.

* * *

பிறகு ஒரு நாள் அகஸ்திய முனிவர் விதர்ப்ப தேசம் வந்து அரசனைக் கண்டு, "என்னுடைய பிதருக்களுக்குத் திருப்தி செய்யப் புத்திரனை விரும்புகிறேன். வாக்குத் தந்தப்படி உன் மகளை எனக்குத் தருவாயாக" என்று கேட்டார்.

நூற்றுக் கணக்கான கன்னிகைகளால் சூழப்பட்டுத் தாதிமார்களின் பணிவிடையைப் பெற்று வளர்ந்த தன் அருமை மகளை வனவாசம் செய்யும் முனிவருக்குக் கொடுத்துவிட அரசனுக்கு மனம் வரவில்லை. ஆனால் முன் செய்த வாக்குத்தத்தத்தை நினைத்து ரிஷியின் கோபத்துக்குப் பயந்தான்.

ராஜாவும் தாயாரும் துயரத்தில் மூழ்கி வருந்துவதை லோபாமுத்திரை பார்த்தாள். "ஏன் வருந்துகிறீர்கள்? என் நிமித்தம் நீங்கள் சாபம் அடைய லாகாது. என்னை முனிவருக்கே கொடுத்து உங்களைக் காப்பாற்றிக் கொள்ளுங்கள். துயரம் வேண்டாம். இதுவே என் பிரியமும்" என்றாள்.

லோபாமுத்திரையின் சொல்லைக் கேட்டு அரசன் சமாதானம் அடைந்தான். முறைப்படி அவளை அகஸ்தியருக்குக் கொடுத்து விவாகம் முடிந்தது.

* * *

முனிவருடன் போக ராஜகுமாரி புறப்பட்டாள். "இந்த உயர்ந்த ஆடைகளையும் ஆபரணங்களையும் கழற்றிவிடு" என்றார் அகஸ்தியர்.

உடனே லோபாமுத்திரை தன் அழகிய ஆபரணங்களையும் வஸ்திரங்களையும் கழற்றி அவற்றைத் தன் தாதிகளுக்கும் கன்னிகளுக்கும் கொடுத்துவிட்டு மரவுரியும் தோலும் கட்டிக் கொண்டு முனிவருடன் வனம் சென்றாள்.

* * *

கங்காத் துவாரத்தில் லோபாமுத்திரை அகஸ்தியருடன் அநேக நாள் விரதங் காத்துப் பணிவிடை செய்து முனிவருடைய அன்பைப் பூரணமாகச் சம்பாதித்தாள்.

ஒரு நாள் பிரியம் மேலிட்டு முனிவர் மனைவியைக் கருப்பம் வகிக்க அழைத்தார். லோபாமுத்திரை ஸ்திரீகளுக்கு இயற்கையான வெட்கம் மேலிட்டுத்

தலை வணங்கிக் கைகூப்பி, "ஸ்வாமி! நான் கடமைப் பட்டிருக்கிறேன். ஆயினும் என்னுடைய பிரியத்தை நீங்கள் செய்ய வேண்டும்" என்றாள். அவளுடைய ரூபசௌந்தரியத்திலும் சீலத்திலும் முற்றிலும் மனங் கவரப்பட்ட முனிவர், "அப்படியே!" என்றார்.

"பிதாவினுடைய வீட்டில் இருந்த காலத்தில் நான் படுத்த படுக்கையையும் அணிந்த வஸ்திராபரணங்களையும் போன்று இவ்விடத்திலும் உம்மால் நான் அடைந்து, நீங்களும் திவ்வியாலங்காரங்களை அணிந்து சந்தோஷமாக என்னைச் சேர வேண்டுமென்பதே என் விருப்பம்" என்றாள்.

"நீ சொல்லியபடி செய்ய எனக்கு செல்வம் ஏது, சௌகரியமேது, நீயும் நானும் வனத்தில் வசிக்கும் தரித்திரர்கள் அன்றோ?" என்றார் அகஸ்தியர்.

"ஸ்வாமி! நீர் தவப் பெருமையினால் எல்லாம் படைத்தவராவீர்! ஒரு நிமிஷத்தில் உலகத்திலுள்ள செல்வம் அனைத்தும் நீர் சம்பாதிக்க முடியும்" என்றாள் லோபாமுத்திரை.

"நீ சொல்லுவது உண்மை. ஆனால் அவ்வாறு தவத்தின் வலிமையால் நான் தனம் சம்பாதித்தால் அது தவத்தின் பயனை அழித்துவிடுமே! இது உனக்கு விருப்பமா?" என்றார்.

"அதை நான் விரும்பவில்லை. தவத்தைப் பயன்படுத்தாமல் போதிய தனம் எங்கேயாவது சம்பாதித்துக் கொண்டு வர வேண்டும் என்கிறேன்" என்றாள்.

"பாக்கியவதியே! அப்படியே செய்கிறேன்" என்று அகஸ்தியர் மனைவிக்குச் சொல்லிவிட்டு, சாதாரண பிராமணனைப் போல் அரசர்களை யாசிக்கப் புறப்பட்டார்.

* * *

மிக்க செல்வம் படைத்தவன் என்று பிரசித்தி பெற்ற ஒரு அரசனிடம் அகஸ்தியர் சென்றார்.

"தனம் வேண்டி வந்தேன். பிறருக்குக் குறைவாவது துன்பமாவது ஏற்படாமல் எனக்குத் தரவேண்டும்" என்றார்.

அந்த அரசன் தன் ஆட்சியின் வரவையும் செலவையும் ஒன்றும் மறைக்காமல் முனிவரிடம், "பார்த்து எடுத்துக் கொள்ளுங்கள்" என்று கணக்கை ஒப்புவித்தான். ராஜ்யத்தின் வரவு செலவுக் கணக்கைப் பார்த்ததில் மிச்சம் ஒன்றும் இருக்கவில்லை. அரசாங்கங்களில் வரவுக்குச் சரியாகவே செலவும் எப்போதும் ஏற்பட்டு விடுகிறது. முன்னாட்களிலும் இப்போதைப் போலவேதான்!

இதைக்கண்டு, "வேறே எங்கேயாவது பார்க்கிறேன்" என்று அகஸ்தியர் புறப்பட்டார். அந்த அரசன், "நானும் கூட வருகிறேன்" என்று அவனும் முனிவருடன் கூடச் சேர்ந்து இருவரும் மற்றொரு ராஜாவிடம் போய்க் கேட்டார்கள். அவ்விடத்திலும் அதே நிலைமையாக இருந்தது. நியாயமான செலவுக்கு எவ்வளவு வேண்டுமோ அந்த அளவுக்குத்தான் அரசன் பிரஜைகளிடமிருந்து வரி வசூல் செய்ய வேண்டும் என்கிற தத்துவத்தை வியாசர் இதன் மூலம் எடுத்துக் காட்டுகிறார். நியாயமான வரிகள் பெற்றுக் கடமைகளைப் பூரணமாகச் செய்து தரும சாஸ்திரப்படி நடந்து வரும் எந்த அரசனிடத்திலாவது தானம் பெற்றால் அவனுடைய பிரஜைகளுக்கு அந்த அளவில் கஷ்டமும் துன்பமும் உண்டாகும் என்று அகஸ்தியர் உணர்ந்தார். அதன்மேல் எல்லாருமாகச் சேர்ந்து இல்வலன் என்கிற ஒரு கொடிய அசுரனிடம் போய் அவனைக் கேட்பது உசிதம் என்று தீர்மானித்தார்கள்.

இல்வலன் என்ற அசுரனும் அவன் தம்பி வாதாபியும் பிராமணர்கள் மேல் துவேஷம் கொண்டவர்கள். பிராமணர்களை விருந்துக்கு இல்வலன் அழைப்பான். மாயையால் தம்பி வாதாபியை ஆடாகும்படி செய்து அந்த ஆட்டை வெட்டிப் பக்குவம்செய்து, வந்த பிராமணர்களை உண்ணச் செய்வான். அந்தக் காலத்தில் பிராமணர்கள் மாமிசம் உண்பார்கள். விருந்து முடிந்தவுடன் இல்வலன், "வாதாபி! வா!" என்று கூவுவான். தான் கொன்றவர்களை யமலோகத்திலிருந்து திரும்பி வரவழைக்கும் வரத்தை இல்வலன் பெற்றிருந்தான். வெட்டுப்பட்டு இறந்த வாதாபி மறுபடி உயிர் கொண்டு பிராமணர்களுடைய வயிற்றைப் பிளந்து விட்டு அசுரச் சிரிப்புச் சிரித்துக் கொண்டு வெளியே வருவான். இவ்வாறு பல பிராமணர்கள் வாதாபியின் செயலால் வயிறு கிழிக்கப்பட்டு மாண்டார்கள். தருமத்தையே ஏமாற்றி இவ்வாறு பிராமணர்களைக் கொன்று தங்கள் எண்ணத்தை நிறைவேற்றி வருவதாக அசுரர்களுடைய கருத்து.

அகஸ்தியர் வந்ததாகத் தெரிந்ததும் இல்வலன் மிக்க மகிழ்ச்சியடைந்து அவரை வரவேற்று வழக்கப்படி விருந்து வைத்தான். வாதாபியை ஆடாகச் சமைத்துப் பரிமாறி, "இந்த

முனிவர் இறந்தார்" என்று மனதில் எண்ணிக் கொண்டு அகஸ்தியரை உண்ணச் செய்தான். விருந்து முடிந்த பின் இல்வலன், "வாதாபி! சீக்கிரம் வெளியே வா! தாமதித்தாயானால் முனிவர் உன்னை மீறுவார்!" என்று சொன்னான்.

முனிவர், "ஓ வாதாபியே! உலக சாந்திக்காக நீ ஜீரணம் செய்யப் பட்டாய்" என்று சொல்லித் தம் வயிற்றைத் தடவிக் கொடுத்தார். இல்வலன், "வாதாபி! வா! வாதாபி! வா!" என்று பன்முறை பயந்து கத்தினான். பயனில்லை! முனிவர்," வாதாபி ஜீரணமாய் விட்டான். ஏன் வீணாக அழைக்கிறாய்?" என்றார்.

அசுரன் கை கூப்பி அகஸ்தியரை வணங்கி அவர் கோரிய தனங்களைக் கொடுத்து அனுப்பினான். லோபா முத்திரையை அகஸ்தியர் திருப்தி செய்தார்.

"உனக்குப் பத்து நல்ல மக்கள் வேண்டுமா, அல்லது பத்துப் பேரை வெல்லக்கூடிய ஒரு மகன் வேண்டுமா?" என்று அகஸ்தியர் மனைவியைக் கேட்டதாகவும், "பகவானே, புகழ் கொண்ட வித்வானும் தருமத்தில் நிலை கொண்டவனுமான ஒரு மகனையே விரும்புகிறேன்" என்று லோபாமுத்திரை சொல்ல, அவ்வாறே அவன் பெற்றதாகவும் கதை.

* * *

ஒரு சமயம் விந்திய மலையானது மேரு மலையின்மேல் பொறாமை கொண்டு, தானும் மேருவைப் போல் வளர்ந்து சூரிய சந்திராதிகளைத் தடுத்து விடப் பார்த்ததாம். இந்தச் சங்கடத்தைத் தீர்த்துக்கொள்ள முடியாமல் தேவர்கள் அகஸ்தியரை வேண்டினார்கள். அவர் விந்திய மலையண்டைசென்று, "பருவதோத்தமனே! எனக்கு வழி விடக் கடவாய்! ஒரு காரியத்துக்காக நான் தெற்கே செல்ல வேண்டியதாக இருக்கிறது. நான் திரும்பிய பின் நீ இஷ்டப்படி வளரலாம். நான் வரும் வரையில் பொறுத்திருப்பாயாக!" என்று சொன்னார்.

அகஸ்தியரிடம் விந்திய பர்வதம் வைத்திருந்த கௌரவத்தினால், "அப்படியே!" என்று மலையும் ஒப்புக் கொண்டதாகவும், இந்த ஒப்பந்தப்படி அகஸ்தியர் தெற்கே போனவர் திரும்பி வரவே யில்லை என்றும், விந்திய மலையும் வளராமல் இதுவரையில் படுத்துக் கிடக்கிறது என்றும், அதிலிருந்து அகஸ்தியர் தென்னாட்டிலேயே இருந்து விட்டார் என்றும் பாரதக் கதை.

ஜப்பானியப் பிரசாரகர்கள் "இந்தியாவை நாங்கள் விடுதலை செய்வோம்" என்று ஜெபிக்கிறார்கள். தம் சொந்த நாட்டிலேயே ஒரு போதும் சுயேச்சையோடில்லாத மக்கள் இப்படிப்பட்டதோர் வாக்குறுதி கொடுப்பது வெகு அழகுதான். இந்தியா சுயராஜ்யத்தை நாடுகிறது. யுத்தத்திற்குப் பிறகு அதை அடையத்தான் போகிறது. மற்ற ஆசிய மக்கள் மீது ஆதிக்கம செலுத்தவேண்டுமேயொழிய விடுவிக்கக்கூடாது என்னும் எண்ணம் கொண்டுள்ள இராணுவத் தலைவர்களின் ஆதிக்கத்திற்குட்பட்டுள்ள நாட்டவரின் உதவி எதுவும் இந்தியாவுக்குத் தேவை யில்லை.

# வெற்றி வழியே விடுதலை



AAA

1019 T M

# கண்கூடாகக் காண்பதையே நம்புகிறோம்.




## விலைவாசிகள் இறங்குவதனால் எதிர் காலத்தை முன்னிட்டுச் சேமித்து வைப்பதே புத்திசாலித்தனம் என்று தெளிவாகிறது.

சென்ற வருஷம் ஒருவரும் பணத்தைச் சேமிக்காதிருந்தால், கண்டிப்பான விலைக் கட்டுப்பாட்டு விதிகளை அரசாங்கத்தார் பிறப்பிக்காதிருந்தால், வியாபாரிகளுக்கு வரும் பொருட்களை ஏராளமாக உற்பத்தி செய்யாதிருந்தால், சென்ற வருஷம் இருந்ததைப் போலவேதான் இன்றும் தங்கு தடையின்றி விலைகள் உயர்ந்திருக்கும்.




ஆனால், தனிப்பட்டவர்கள் சேமிப்பின் பலனாகவும், அரசாங்கத்தாரின் நடவடிக்கைகளின் பலனாகவும் விலைவாசிகள் இறங்கிவிட்டன. முட்டாள்தனமாக, நகைகள், சொத்துக்கள், பண்டங்கள், சாமான்கள் ஆகியவற்றை வாங்கியவர்கள், அவற்றின் மதிப்பு தம் கண் முன்னே குறைவதைக் காண்கிறார்கள்.




இதோடு நின்று விடவில்லை. விலைவாசிகள் இன்னும் குறையும். புத்திசாலிகளாயிருங்கள். விலைவாசிகளின் வீழ்ச்சி உங்களுக்கு தீங்கிழைக்கும்படி விடாதீர்கள்.

நேர்க்கண்டவை முன்போலவே இப்போதும் நம்பிக்கைக்குரிய முதலீடுகளாகும். விலைவாசி எவ்வளவு அதிகம் குறைந்துபோனாலும், இந்த முதலீடுகளின் மதிப்பு உயருகிறது— கூட்டுறவு சங்கங்கள். இன்ஷ்யூரென்ஸ். சேமநிதி. தபாலாபீஸ் சேமநிதி. அரசாங்கக் கடன் பத்திரங்கள். நேஷனல் சேவிங்ஸ் செர்டிபிகேட்டுகள்.

இப்போது பொருட்களை வாங்காதீர்கள். பொறுங்கள்! புதுத் தட்டுமுட்டுச் சாமான்கள், புதிய வீடு, நகைகள், மோட்டார் கார் முதலியவற்றை வாங்குவதற்கு, யுத்தத்திற்குப் பிறகு ஏராளமான சந்தர்ப்பங்கள் உண்டு. இப்போது பணத்தைச் சேமித்து அப்போது பணத்தைச் செலவு செய்யுங்கள்.

# உங்களால் இயன்றவரை மிச்சப் படுத்துங்கள். மிச்சப் படுத்தியதை முதலீடு செய்யுங்கள்.

**தேசீயப் போர்முனையார் விடுக்கும் தேசீய வேண்டுகோள்**

AAA 1114 TM

# வாழ்க்கையில் நடக்குமா?

ஜெயந்தி

பத்திரிகையில் ஒருநாள் பின் வரும் விளம்பரம் வெளியாயிற்று:

"வீட்டு நிர்வாகத்தைக் கவனித்துக் கொள்ளவும், காரியதரிசி வேலை பார்க்கவும் ஒரு வாலிபர் தேவை. வயது 30க்கு மேல் இருக்கக் கூடாது. சம்பளம் ரூ. 150. இரண்டு தினங்களில் நேரில் வந்து விண்ணப்பித்துக் கொள்ளவும். சொக்கலிங்க முதலியார், பாங்கர், ராயப்பேட்டை, சென்னை."

ஆதியில் பரம ஏழையாக இருந்தவர் சொக்கலிங்கம். சுமார் முப்பது வருஷங்களுக்கு முன், கையில் காலணா இல்லாமல் அவர் சென்னைப் பட்டணத்துக்கு வந்து, தம் தூர பந்துவான ஒரு தனிகரிடம் வேலைக்கு அமர்ந்தார். தமது உழைப்பாலும், குண விசேஷத்தாலும் எஜமானின் நன்மதிப்பைப் பெற்றார். அந்த தனிகர் கடைசிக் காலத்தில், தம் சொத்து அவ்வளவையும் சொக்கலிங்கத்தின் பெயருக்கு எழுதி வைத்து விட்டுச் சென்றார். இதற்குப் பிறகுதான், குமாஸ்தா சொக்கலிங்கமாயிருந்தவர் திடீரென்று பாங்கர் சொக்கலிங்கமானார்.

கொடுக்கல் வாங்கல் விஷயத்தில் முதலியார் கறார்கண்டிப்புத்தான். கடன் வாங்குவதைத் தடுப்பதற்காகவே அதிக வட்டி வாங்குவதாக அவர் வாதிப்பார். சொன்ன சொல்லைக் காப்பாற்றுவது எவ்வளவு திமை என்பதை ருஜுப்பிக்கவே, வீட்டை ஜப்தி செய்வதாகச் சொல்லுவார். அவர் மனத்தில் பட்ட உண்மையான அபிப்பிராயங்களை வெறும் பசப்பு வார்த்தை என்று எண்ணி உலகத்தார் பரிகசித்தார்கள்.

இப்படிப் பட்டவர் பத்திரிகையில் மேற்கண்ட விளம்பரத்தைச் செய்தால் யார்தான் ஆச்சரியப்படமாட்டார்கள்? "இது வெறும் ஜம்பக்! இதில் ஏதோ சூது இருக்கிறது!" என்று நினைத்துச் சிலர்தான் வேலைக்கு விண்ணப்பித்துக் கொண்டார்கள். அவர்களில் பசுபதி பி. ஏ. யும் ஒருவன்.

ஒரு நாள் காலை முதலியாரின் வீட்டுக்குப்போய்ப் பசுபதி வேலைக்கு விண்ணப்பித்துக் கொண்டான். அவனைப் பார்த்ததுமே, 'இவன்தான் நமக்கு ஏற்றவன்!' என்று முதலியார் தீர்மானித்தார்.

ஆஜானுபாகுவாகத் தோன்றிய பசுபதியின் முகத்தில் சாந்தமும் கம்பீரமும் ஒருங்கே விளங்கின.

அதிலிருந்து பசுபதி, முதலியாரின் வீட்டை சுவர்க்கம் என்று நினைத்துக் கொண்டிருந்தான். காலையில் பத்திரிகைகளைப் படித்து முதலியாருக்குச் செய்திகளைச் சொல்வான். சிறிது நேரம் கணக்குப் புத்தகங்களைப் புரட்டி விட்டுச் சாப்பிடப் போவான். சாயங்காலம் ஆனந்தமாய் விளையாடப் போவான். மொத்தத்தில், அவன் ராஜபோகம் அனுபவித்து வந்தான். சமையலானதும் ஆகாரதுமாக, முதல் சாப்பாடு பசுபதிக்குத்தா னென்றால், முதலியார் அவனுக்கு எவ்வளவு சுதந்திரம் கொடுத்திருந்தார் என்பதை ஊகிக்கலாம்.

○

இவ்விதம், நாட்கள் ஓடிக் கொண்டிருந்தன. பசுபதியின் இன்பமயமான வாழ்க்கையில் எதிர்பாராத சம்பவம் ஒன்று நடந்தது. ஒருநாள் முதலியாரின் தமையனாரின் பெண் கனகம் பம்பாயிலிருந்து வந்தாள். அவள் தந்தை சிதம்பர முதலியார் அங்கே நல்ல உத்தியோகத்திலிருந்தார்.



"ஸென்ட்ரலுக்கு என்ன கூலி கேட்பாய்?"
"எட்டணா கொடு சாமி!"
"அநியாயமாய்க் கேட்கிறாயே? நாலணா தானே கொடுக்கிற வழக்கம்!"
"போ, சாமி போ! அந்தக் காலமெல்லாம் மலையேறிடுச்சு. பருத்திக்கொட்டை, கொள்ளு விலை யெல்லாம் தெரியாது போலிருக்கு!"



சொக்கலிங்கம் ஏழ்மை நிலையில் இருந்தபோது அவரது தமையன் அவரைத் திரும்பிப் பார்க்கக்கூட இல்லை. செல்வம் வந்ததும் பழைய உறவினர்களும் அவருடன் இழைய ஆரம்பித்தார்கள்.

ஆனால் எப்பொழுதுமே சொக்கலிங்கத்திற்குக் கனகத்திடம் சொல்ல முடியாத வாஞ்சை இருந்தது. சகோதரர்களுக்குள் மனக் கசப்பு முற்றியிருந்த சமயங்களில்கூட, அவர் 'கனகம், கனகம்' என்று உயிரைவிடுவார். கனகம் அடிக்கடி சித்தப்பாவின் வீட்டுக்குப் போவதை அவன் பெற்றோர்கள் ஆட்சேபிக்கவில்லை.

தமையனார் குடும்பம் சென்னையில் இருந்தபோது, கனகம் ஓயாமல் சித்தப்பா வீட்டுக்கு வந்து விடுவான். விதம் விதமான ஆடைகளும் அணிகளும் முதலியார் குழந்தைக்கு வாங்கிக் கொடுப்பார்.

**ப**ல வருஷங்கள் கழித்துக் குழந்தையைப் பார்த்த முதலியாருக்கு ஆனந்தம் தாங்கவில்லை. இளமையின் எழிலுடனும் ஆனந்தமே உருவாக விளங்கிய கனகத்தைப் பார்த்து முதலியார் உள்ளம் பூரித்தார்.

கனகம் சித்தப்பாவின் வீட்டுக்கு எப்பொழுது வந்தாலும் பட்சி ஜாலங்களைப் போல் சுயேச்சையாக எங்கும் சுற்றியலைவான். ஆனந்தமாய் ஆடிப் பாடி விளையாடிக் கொண்டிருப்பான். இந்தத் தடவையோ அறையை விட்டு அவன் வெளியில் வருவதே அரிதாயிருந்தது. காரணம், பசுபதிதான்! அவனைக் கண்டு ஓடி ஒளிந்து கொள்வான். பசுபதியும் அவனைக் கண்டு சங்கோஜப் பட்டுப் போய்விடுவான். ஆனால், இதெல்லாம் கொஞ்ச காலைக்குத் தானே?

**ஒ**ருநாள் அவன் சாப்பிட்டுவிட்டுச் சமையற் கட்டிலிருந்து வெளியே வந்தான். திடீரென்று அவனுக்குக் குமட்டல் வந்தது. தலையைப் பிடித்துக் கொண்டு சமாளித்துக் கொள்ளப் பார்த்தான். எதிரில் வந்த முதலியார் அதைப் பார்த்துத் திகிலுடன் "என்ன? உடம்பை என்ன செய்கிறது?" என்று கேட்டார். கனகம் விழுங்கி விடுபவன் போல் பசுபதியைப் பார்த்துக் கொண்டு நின்றான். "ஒன்றுமில்லை; ஏதோ குமட்டுகிறது!" என்றான் பசுபதி.

"ஐயோ குமட்டுகிறதா, அட பாவிகளா?" என்று கத்திக் கொண்டே முதலியார் ஓடோடியும் சென்று டாக்டரை டெலிபோனில் கூப்பிட்டார்.

"ஆபத்து! சீக்கிரம் வாருங்கள்!" என்று கூப்பிட்டார் முதலியார். பசுபதிக்குச் சிரிப்பு வந்துவிட்டது: "என்ன ஆபத்து எனக்கு? இன்று இரவு லங்கணம் போட்டால் சரியாய்ப் போகும். எதற்காக டாக்டரைக் கூப்பிட்டீர்கள்!" என்றான்.

ஆனால், முதலியார் அவன் சொன்னதைக் காதில் போட்டுக் கொள்ளவில்லை. மெதுவாக அவனைப் பிடித்துப் பக்கத்திலுள்ள படுக்கையில் படுத்துக் கொள்ளச் சொன்னார். வேலைக்காரனைக் கூப்பிட்டு விசிறச் சொன்னார்.

சற்று நேரத்திற்கெல்லாம் டாக்டர் வந்து பசுபதியைப் பரிட்சை செய்து பார்த்து, "ஒன்றுமில்லையே! மனிதர் சௌக்கியமாகத் தான் இருக்கிறார்!" என்று சொன்ன பின்போில்தான் முதலியார் சமாதானமடைந்து படுக்கப் போனார்.

**க**னகத்துக்கு ரொம்ப ஆச்சர்யமாயிருந்தது. பசுபதிக்குத் தலைவலி என்று சொன்னதுமே, சித்தப்பாவின் உடல் பதைத்ததையும் டாக்டரைக் கூப்பிட்டதையும் நினைக்க அவனுக்குச் சித்தப்பாவின் பேரில் கோபமும் பசுபதியின் பேரில் பொறாமையும் உண்டாயின. சித்தப்பாவின் முழு அன்புக்கும் தான் பாத்திரமாகியிருந்ததாக இது

காரும் அவன் எண்ணியது வெறும் பிரமை என்று உணர்ந்தான்.

இந்த எண்ணத்தை அவளால் மறைக்க முடியவில்லை. "ஏனம்மா ஒரு மாதிரி இருக்கிறாய்?" என்று அன்று இரவு சாப்பாடானதும் கேட்டார் முதலியார். கனகம், "ஒன்றுமில்லை, அப்பா! தலையை வலிக்கிறது கொஞ்சம்!" என்றாள் கனகம்.



ஆனால், அவள் உத்சாகம் இழந்து தோன்றியதையும் அவ்வப் பொழுது பேசிய வார்த்தைகளிலிருந்தும் அவள் மனத்திலிருப்பது முதலியாருக்குப் புலனாகி விட்டது. அவர் கனகத்தைப் பார்த்து, "குழந்தாய்! நீ என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாய் என்று எனக்குத் தெரியும். பசுபதியை நான் காரணமில்லாமல் இங்கே வைத்துக் கொண்டிருக்கவில்லை. எதற்காக வைத்துக் கொண்டிருக்கிறேன் என்று சொல்கிறேன்" என்று கூறிக் கனகத்தை அருகிலே வரும்படி சமிக்ஞை செய்தார்.

"கனகம்! எனக்கு இவ்வளவு செல்வமும் எப்படிக் கிடைத்ததென்று உனக்குத் தெரியும். என் எஜமான் இறந்து போகும்போது அவ்வளவு சொத்தையும் எனக்கு எழுதி வைத்தார். அத்துடன் என் கவலை விட்டது என்று நான் நினைத்தேன். அப்படியே நாலு வருஷத்துக்கு முன்கூட நினைத்துக் கொண்டிருந்தேன். அதுதான் இல்லையென்று சமீபத்தில் தெரிந்தது. என் எஜமானின் தாயாதி ஒருவன் சிங்கப்பூரில் இருந்து வந்தான். எஜமான் உயிருடன் இருக்கும் வரை இரண்டு பேருக்கும் முகாலோபனம் கூடக் கிடையாது. ஆனால் எஜமான் இறந்ததும், சொத்து தன்னுடையதுதான் என்று சிங்கப்பூர் ஆசாமி கட்சி பேச ஆரம்பித்து விட்டான். நான் ஒரு செல்லாக் காசுகூடக் கொடுக்க முடியாது என்று சொன்னேன். ஜப்பான்காரன் சிங்கப்பூரைப் படையெடுத்தபோது, அவன் மூட்டை முடிச்சுடன் இங்கே வந்து விட்டான். அவன் வந்தது முதல் பணம் கொடுக்கும்படி கடித மூலமாகவும் நேரிலும் என்னைத் தொந்தரவு செய்கிறான். ஆஸ்தியில் பாதியாவது கொடுக்கா விட்டால் என்னை விஷம் வைத்துக் கொன்று விடுவதாக அவன் சொல்லிக் கொண்டிருப்பதாக ஒருநாள் ஒரு கடிதம் வந்தது. அதிலிருந்து நான் உணவு சாப்பிடும் விஷயத்தில் சர்வ ஜாக்கிரதையாக இருக்கிறேன். முதலில் ஒருவர் சாப்பிட்டுப் பார்த்து, பயமில்லை என்று தெரிந்த பிறகுதான் சாப்பிடுகிறேன். இப்பொழுது பசுபதியை எதற்காக வைத்துக் கொண்டிருக்கிறேன் என்று தெரிகிறதா?" கனகத்தின் விழிகள் ஆச்சர்யத்தால் பெரிதாயின.

கனகத்தின் மனம் வேகமாக அடித்துக் கொண்டது. "அன்றைக்கு அவர் சாப்பிட்டு முடிந்ததும் ஏதோ ஆபத்து வந்து விட்டது என்று எண்ணித்தானே அவருக்கு அவ்வளவு உபசாரம் செய்தீர்கள்?" என்றாள். முதலியார்

தலையை அசைத்தார். அந்தக் கணத்தில் கனகத்துக்குப் பசுபதியின் மேலிருந்த அத்தனை பொறுமையும் போய் அளவிலாத பச்சாத்தாபம் உண்டாகி விட்டது.

அன்று நடுப்பகல் உணவுசாப்பிடப் பசுபதி உட்கார்ந்து கொண்டபோது, கனகம் தூர இருந்து கவனித்துக் கொண்டேயிருந்தாள். அவன் ஆகாரத்தை எடுத்து வாய்க்கருகில் கொண்டு போனபோது வீறிட்டுக் கதறிவிடலாமா என்று பார்த்தாள்! நல்லவேளையாகப் பக்கத்தில் வந்த சித்தப்பா அவள் கைகளைப் பிடித்து உள்ளே அழைத்துக் கொண்டு போனார்.

"கனகம்! இன்றைக்கு முடிவாக ஒரு வார்த்தை சொல்லி விடுகிறேன். உன் எண்ணம் எனக்குத் தெரியும். தப்பித்தவறிப் பசுபதி இறந்துவிட்டால் நீயும் இறந்து விடுவாய் என்று நீங்கள் நடந்து கொள்ளும் மாதிரியிலிருந்து எனக்குத் தெரிகிறது. நான் சொல்வதைக் கேட்டாயானால் பசுபதிக்கு இந்த வேலை இனிக் கொடுக்கவில்லை! அதாவது நீ பசுபதியைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும்!" கனகம் ஆனந்தக் கண்ணீர் உகுத்தாள்.

ஒரு மாதத்திற் கெல்லாம் பசுபதிக்கும் கனகத்திற்கும் கல்யாணம் நடந்தது. ஒருநாள் பசுபதி கனகத்தைப் பார்த்து, "இன்னும் ஏன் முகத்தை இப்படி வைத்துக் கொண்டிருக்கிறாய்! சித்தப்பா ஆகாரத்தை முதலில் சாப்பிட்டுச் செத்து விட்டால் என்ன செய்கிறது என்றுதானே? பயப்படாதே! யாரும் ஆகாரத்தில் விஷம் வைக்க மாட்டார்கள்?"

"அது என்ன நீங்கள் அவ்வளவு நிச்சயமாகச் சொல்கிறீர்கள்?" என்றாள் கனகம்.

"உன்னிடம் நிஜத்தைச் சொல்லி விடுகிறேன். சிங்கப்பூரிலிருந்து வந்த ஒருவர் உன் சித்தப்பாவிடம் பணம் கேட்டு உபத்திரவப் படுத்திக் கொண்டிருந்தது என்னமோ வாஸ்தவம்தான். அந்த மனிதர் சித்தப்பாவைக் கொன்று விடுவதாகப் பயமுறுத்தியதும் உண்டு. ஆனால் அவரை ஐந்தாம் படைக்காரர் என்று கண்டு கொண்டு அரசாங்கத்தார் கைது செய்து விட்டார்கள். இது விஷயம் சித்தப்பாவுக்குத் தெரியாது. சிங்கப்பூர்க்காரர் விஷம் வைத்துச் சித்தப்பாவைக் கொல்ல எண்ணியிருப்பதாக அந்த அனாமதேயக் கடிதம் எழுதியது நான்தான்."

"எதற்காக அப்படி எழுதினீர்கள்?"

"எனக்கோ வேலை கிடைக்கவில்லை. சித்தப்பாவிடமோ நிறையப் பணம் இருக்கிறது. எதிரி விஷம் வைக்கப் போகிறான் என்ற பயம் இருந்தால், உணவை ருசி பார்க்கும் வேலைக்கு நல்ல சம்பளத்தில் ஒருவரை வைத்துக் கொள்வார் அல்லவா?"

"ஐயோ, சித்தப்பா உங்களைப் பரம சாது என்று நினைத்துக் கொண்டிருக்கிறாரே, இவ்வளவு சூதுகாரரா நீங்கள்?"

"கனகம்! நான் சூதுகாரனல்ல. ஒரு புஸ்தகத்தில் நான் ஒரு கதை வாசித்தேன். அதில் ஒரு பணக்காரரிடம் வேலை வாங்கிக் கொள்ள இப்படித்தான் ஒருவன் தந்திரம் செய்தானாம். கதையில் எழுதியிருப்பது போல் வாழ்க்கையில் நடக்காது என்று சிலர் சொல்கிறார்களே, இது வாஸ்தவம்தானா? இதைப் பரிசோதிக்க நான் அந்தக் கடிதம் எழுதினேன். கதையில் வரும் சம்பவங்களை விட வாழ்க்கையில் அதிசயமான சம்பவங்கள் நடந்திருக்கின்றன. நான் வேலையைத்தான் எதிர்பார்த்து அந்தக் கடிதம் எழுதினேன். ஆனால் கிடைத்தற்கரிய பொக்கிஷமான நீ கிடைத்திருக்கிறாய்!"

சட்டென்று கோபமாகக் கனகம் முகத்தைத் திருப்பிக் கொண்டாள். "பொக்கிஷம் என்று என்னைச் சொன்னால் நான் பேசமாட்டேன்."

"மன்னிக்கவேண்டும். பொக்கிஷம் இவ்வளவு அழகாக எங்கே பேசப்போகிறது?" என்று சொல்லிக் கொண்டே அவளை நெருங்கினான் பசுபதி.



"ஐயா! பணத்தைத் திருப்பிக் கொடுங்கள்! நான் வேறு ஹோட்டலுக்குச் சாப்பிடப் போகிறேன். போர்டில் எழுதியிருப்பதுபோல அவ்வளவு நாழி என்னால் சாப்பிட முடியாது!"

# சகுந்தலை

• ஸைமாலி •

அந்தி வேளை. பொன் வேய்ந்த பராந்தகனை நினைத்துப் பொறுமைப் பட்டவன் போல் கதிரவன் அந்தக் குன்றுகளின் சிகரங்களைத் தங்கமய மாக்கிக் கொண்டிருந்தான்.

பங்களாவை விட்டு வெளியே வந்த ரங்கபதி நாயுடு, "எதிரே வளர்ந்து இருந்த அந்தக் குன்றையும், தோட்டத்தையும் ஒரு முறை பார்த்துவிட்டு, "சகுந்தலா, சகுந்தலா!" என்று இரு முறை கூப்பிட்டார்.

அவருக்கு உதவி செய்வதுபோல் அந்தக் குன்றும் இரண்டு முறை அந்தப் பெயரைச் சொல்லி ஒலி பரப்பியது.

ஒன்றும் பதில் இல்லை.

அதே சமயம் அரிவாளால் ஏதோ மரக் கிளையைக் கழித்துக் கொண்டு வேலைக்கார முருகன் அங்கு வரவே, நாயுடு அவனைப் பார்த்து, "குழந்தை எங்கேயடா போனாள்?" என்று கேட்டார்.



"எங்கே சாமி போயிருக்கும்? இங்கு தான் எங்கேயாச்சும் உலாவப் போயிருக்கும். இதோ போய் அழைச்சிக் கிட்டு வாரேன்" என்று சொல்லி விட்டுக் கிளம்பினான் அவன்.

அதற்குள், "இதோ, வந்துட்டேன்!" என்று தன் முல்லைப் பற்களைக் காட்டிச் சிரித்துக் கொண்டே ஓடி வந்தாள் ஒரு யுவதி.

நாயுடுவின் முகம் சந்தோஷத்தால் மலர்ந்தது.

"எங்கே அம்மா போனாய்? உனக்காக நான் எவ்வளவு நாழி காப்பியை வைத்துக் கொண்டு காத்திருக்கிறது?" என்று கேட்டுக் கொண்டே அவளை உள்ளே அழைத்துச் சென்றார் ரங்கபதி நாயுடு.

★

புதுக்கோட்டைக்குப் பக்கத்தில் பத்தாவது மைலில் உள்ளது நார்த்தாமலை என்னும் கிராமம். அங்கு வளர்ந்து கிடக்கும் குன்றுகளில் சில, நமது பழைய காலச் சிற்பச் செல்வங்களைக் காப்பாற்றி வைத்திருந்த பெருமையை அடைந்திருக்கின்றன. அந்தக் குன்றுகளின் ஒன்றின் அடிவாரத்தில்தான் நாயுடு தமது பங்களாவை அமைத்துக் கொண்டிருந்தார்.

சீப் ஜட்ஜ் ரங்கபதி நாயுடு என்றால் புதுக்கோட்டை சமஸ்தான மக்களில் தெரியாதவர்கள் இருக்கமாட்டார்கள். அவருடைய நேர்மையான போக்கு, பொது மக்களிடையே அவர் அடைந்திருந்த செல்வாக்கு இரண்டும் சேர்ந்து செய்த சூழ்ச்சியால் அவர் 'ரிடயர்ட்' ஆன காலத்திலும் சர்க்கார் கையிலிருந்து தப்ப முடியவில்லை. உயர்ந்த சம்பளத்தில் யுத்தப் பிரசார சபைக்கு அவரைத் தலைவராகத் தேர்ந்தெடுத்திருந்தார்கள்.

நாயுடுவின் வீட்டில் அவரது மனைவி, விதவைத் தங்கை காமாக்ஷி, மகள் சகுந்தலா இவர்களைத் தவிர, தூர பந்துக்களில் இருவரும், வேலைக்காரர்களும் இருந்தனர்.

சகுந்தலா நாயுடுவுக்கு ஒரே பெண். ஜயராமன் காமாக்ஷிக்கு ஒரே மகன்.

ஜயராமன் சிறு குழந்தையாயிருக்கும்போதே, காமாக்ஷி தன் கணவனை இழந்து விட்டாள். ஆகையால் அவள் குடும்பமும் நாயுடுவின் மேற்பார்வையிலேயே வரவேண்டியதாயிற்று. அவருக்கும் ஏராளமான சொத்து இருந்தது. ஜயராமன் காலேஜில் வாசித்துக் கொண்டிருக்கும்போதே தறுதலைத் தனமாகத் திரிய ஆரம்பித்தான். நாயுடுவுக்கு அவன் நடத்தை கொஞ்சம்கூடப் பிடிக்கவில்லை. பி. ஏ. வகுப்பில் தவறி விட்ட அவன், நாடகக் கம்பெனி ஒன்றில் சேர்ந்து கொண்டு ஊர் சுற்றுவ-

தென்றல் யாருக்குத்தான் பிடிக்கும்? வீட்டைவிட்டுக் கிளம்பிய அவன் மூன்று வருஷங்களாக இந்தப் பக்கம் எட்டிப் பார்க்கவே இல்லை. எப்போதாவது நினைத்துக் கொண்டால் தன் தாயாருக்கு ஒரு கடிதம் போடுவான். அதுவும் இந்த இரண்டு வருஷங்களாக ஒரு தகவலும் இல்லை.

காமாக்ஷிக்குக் கவலை அதிகரித்தது. தன் மகனைப் பற்றிய கவலையைவிடத் தன் அண்ணன் அவனைப் பற்றிக் கொண்டிருக்கும் கெட்ட அபிப்பிராயமே அவள் மனத்தை மிகுந்த வேதனைப்படுத்தியது. ஒரு சமயம் நாயுடு விளையாட்டுப்போல் பேச வந்து, "காமாக்ஷி! சகுந்தலையை ஜயராமனுக்குப் பிடித்துக் கட்டிவிடுவதில் எனக்கு ஒன்றும் ஆட்சேபனை இல்லை. ஆனால் அவனுக்கு வேஷம் போட்டுக் கொண்டு ஆடத் தெரியாதே என்றுதான் எனக்குக் கவலையாயிருக்கிறது!" என்று குத்தலாகச் சொன்னதைக் காமாக்ஷியால் மறக்கவே முடியவில்லை.

★

சகுந்தலையும் ஜெயராமனும் ஏறக்குறைய ஒரே வயதுடையவர்கள். சிருஷ்டி கர்த்தாவின் செல்லப் பிள்ளை போல், சகுந்தலை நாளுக்கு நாள் புது எழிலுடன் செடி கொடிகளிடையேயும், மலைகள் மீதும் ஏகாந்தமாய்த் திரிந்து வளர்ந்து கொண்டிருந்தாள். பிரமிக்கத்தக்க அவள் அழகைக் கண்டு, "இவளை மருமகளாக அடைய நாம் கொடுத்து வைக்கவில்லையே!" என்று நினைத்துப் பெருமூச்சு விடுவாள் காமாக்ஷி.

உண்மையில், ஜயராமன் சகுந்தலையின் மனத்திற்குள் புகுந்து எத்தனையோ வருஷங்கள் ஆகி விட்டன. அவன் வீட்டை விட்டுப்போன இந்த மூன்று வருஷங்களிலும் சகுந்தலை அவனைப் பற்றி நினைக்காத நாளே கிடையாதென்று சொல்ல வேண்டும். விளையாட்டில் உயிர் வைத்திருந்த அந்தக் காலத்தில், அவன் தன்னுடன் எவ்வளவு அன்பாகப் பேசிப் பழகினான் என்று நினைக்கும்போது, அவள் உள்ளம் அவனைக் காணத் துடிக்கும். அன்றொரு நாள் வீட்டில் எல்லோரும் சுவாமி தரிசனத்திற்காகச் சென்றிருந்தார்கள். ஹாலில் சகுந்தலா மட்டும் உட்கார்ந்து ஏதோ புஸ்தகம் படித்துக் கொண்டிருந்தாள். காபி சாப்பிட்டுக் கொண்டிருந்த ஜயராமன் அவளை வம்புக்கு இழுத்து, வேடிக்கை பார்ப்பதற்காக, குறும்புடன் அவளை நோக்கி, "பெயர் வைத்துக் கொண்டாளாம் பெயர்! யாராவது துஷ்யந்த மகாராஜா போன்றவனைப் பார்த்துக் கலியாணம் பண்ணிக் கொள்ள எண்ணமோ?" என்றான்.



சகுந்தலை சிரித்துக் கொண்டே, "ஏன், நீதான் அந்தத் துஷ்யந்த மகாராஜாவாக இருந்து விடேன்!" என்றாள் மெதுவாக.

"வேண்டாம், வேண்டாம்! நான் துஷ்யந்த மகாராஜாவாக இருக்கவும் வேண்டாம், உன்னை நான் அவனைப்போல் மறக்கவும் வேண்டாம்!" என்று கூறிக் கலகலவென்று சிரித்தான் ஜயராமன்.

அந்தச் சிரிப்பின் ஒலி இன்னும் சகுந்தலையின் காதுகளில் ஒலித்துக் கொண்டிருந்தது. "இப்படியெல்லாம் சொன்ன ஜயராமனா மூன்று வருஷ காலமாக நம்மை மறந்துவிட்டு இருக்கிறான்?" என்று நினைந்து அவள் ஏங்குவாள்.

★

ஒரு நாள் சகுந்தலா சுனை நீரில் நீராடிவிட்டு, அந்த உலர்ந்து உலராத் தலையிலே இரண்டு இலையுடன் கூடிய ஒரு ரோஜா மலரைச் செருகிக்கொண்டு, கலகாம்பர வர்ணப் புடவையால் தன் அழகு மிளிர மலை மீதிருந்து ஆடி அசைந்து இறங்கிக் கொண்டிருந்தாள்.

'சகுந்தலா! நில்!' என்ற குரலைக் கேட்டு அவள் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள். ஆச்சரியமும், உவகையும் ஒன்றையொன்று பின்ன, "ஜயராமனா?" என்றாள் அவள்.

"ஆமாம், வனராணி!" என்றான் ஜயராமன்.

சகுந்தலை புன்னகை அரும்ப, புரட்சி விழிகளால் அவனைத் தூண்டில் போட்டு இழுத்த வண்ணம் மெல்ல, அவ்விடம் விட்டு அகன்றாள்.

ரங்கபதி நாயுடு எல்லாவற்றையும் மறந்து, ஜயராமனை வரவேற்றுப் பேசினார். தான் அப்பொழுதே நாடகக் கம்பெனிக்கு முழுக்குப் போட்டுவிட்டதாகவும், விமானப் படையில் சேர்ந்து

இப்பொழுது இரண்டரை வருஷங்கள் ஆகிறதென்றும், டாக்டர் சர்ட்டிபிகேட்டின் பேரில் வந்திருப்பதாகவும் கூறினான்.

காமாக்ஷிக்குச் சந்தோஷமும் தாங்கவில்லை. ஜயராமன் வந்ததும், அவனிடம் எவ்வளவோ பேசவேண்டுமென்றிருந்த சகுந்தலை, எங்கேயோ ஒரு மூலையில் ஒளிந்துகொண்டாள்.



ஆனால் ஜயராமனா விடுகிறவன்? வீடு முழுவதும் தேடிவிட்டுத் தோட்டத்தின் பக்கம் சென்றான். அங்கு கண்ட காட்சி அவன் உள்ளத்தை இன்னும் கெட்டித் தள்ளியது.

ஒரு மணல் மேட்டிலே படுத்துக்கொண்டு மரத்திலிருந்து நீண்டு தொங்கிக் கொண்டிருந்த ஒரு கொடியைப் பிடித்து இழுத்த வண்ணம், தன்னை மறந்திருந்தாள் சகுந்தலை.

“சகுந்தலா!” என்றான் ஜயராமன்.

சட்டென்று எழுந்து உட்கார்ந்தாள். அவள் முகம் குப்பென்று சிவந்தது. நாணத்துடன் கூடிய இள முறுவல் அவள் முகத்தை இன்னும் அழகுபடுத்திற்று.

விரைந்து சென்று அவள் மலர்க் கரங்களைப் பற்றிய ஜயராமன், உணர்ச்சி மேலிட்டவனாய், “சகுந்தலா! விமானிகளுக்குப் பூலோகம் மனப்பாடம். ஆகாயத்திலேயும் எவ்வளவோ உயரம் பறந்திருக்கிறேன். ஆனால், இப்பொழுது நான் எங்கிருக்கிறேன் என்றே எனக்குப் புரியவில்லையே!” என்றான்.

“ஏன் புரியும்? எங்களுக்குத்தான் இத்தனை நாளும் நீங்கள் இருந்த இடம் புரியாமலிருந்தது. இப்பொழுது உங்களுக்கே புரியவில்லையாக்கும்!” என்று சொல்லிக் கொண்டே சகுந்தலை அவன் பிடியினின்றும் தப்பி ஓடினாள்.





# காலக்ஷேபம்

### யார் அதிர்ஷ்டசாலி?

மனைவி:—கல்யாணம் என்கிறதே பெரிய அதிர்ஷ்டச் சீட்டாய்த்தானிருக்கிறது. சிலருக்கு அது நன்றாய் முடிகிறது; சிலருக்கு வேறு விதமாய் முடிகிறது!

புருஷன்:—ஆமாம், ஆமாம்! நன்றாய்ச் சொன்னாய். உன் அதிர்ஷ்டத்தையும் என் துரதிர்ஷ்டத்தையுமே பாரேன்!

—டி. கே. சுப்பிரமணியன்.



### ரேஷன் தகராறு!

வீட்டுக்காரர் ஒரு நாள் விருந்தாளியிடம் சாமர்த்தியமாகப் பேசக் கொடுத்தார்.

வீட்டுக்காரர்:—நீங்கள் ஊரை விட்டு வந்து ரொம்ப நாளாய் விட்டதே. உங்கள் பெண்டாட்டி பிள்ளைகளெல்லாம் உங்களைப் பற்றிக் கவலைப்பட்டுக்கொண்டிருக்க மாட்டார்களோ?



விருந்தாளி:—நல்ல வேளையாய் ஞாபகப்படுத்தினீர்கள்: இன்றைக்கே கடிதம் போட்டு அவர்களையும் இங்கேயே வரவழைத்து விடுகிறேன்! —சாரதா.



### அப்படியா?

ஓட்டல்காரர்:—என்னய்யா நீர் நம் ஓட்டல் இட்டிலியைப் பற்றிக் குறை கூறுகிறீரே? நம்ம ஓட்டல் இட்டிலியால் மட்டும் இந்த ஓட்டல் கௌரவம் எவ்வளவு உயர்ந்திருக்கிறது தெரியுமா?

சாப்பிடுபவர்:—இருக்கலாம், இருக்கலாம்! இந்தமாதிரி இட்டிலிகளை வைத்துக்கொண்டே எட்டுமாடி கட்டி ஓட்டலையே உயர்த்திவிடலாமே! —ரா. வரதன்.



### காகிதக் குப்பை!

அதிகாரி (தோட்டக்காரனைப் பார்த்து):—தோட்டம் முழுவதும் ஒரே காயிதக் குப்பையாய் இருக்கிறதே! அவர்களுக்கு இந்த போர்டை காண்பிக்கிறதுதானே!

தோட்டக்காரன்:—கமிஷனர் ஐயா, இனி மேல் யாரும் காகிதத்தை இங்கே போடக்கூடாது என்று வெளியிட்ட காகிதக் குப்பை தான் இது. —பி. கணேசன்.

### ஒரு படி மேலே

கல்யாண வீட்டில் சமையல்காரன் மற்றொருவனைப் பார்த்து:—டேய்! இன்னும் 6 படி வடிக்கணுமாம் சாதம் போறாதாம்.

மற்றவன்:—இதென்னடா எழவாப் போச்சு.

முதலவன்:—உஷ்! இரைந்து சொல்லாதே. தாலி கட்டுகிற சமயம். யார் காதிலேயாவது விழப்போறது. கல்யாண வீட்டிலே எழவு என்கிறயே.

மற்றவன்:—பின் என்னடா? 6 படி வடிக்கிறதற்குள்ளே தாலியே அறுந்து போயிடும் போல இருக்கே.

—கே. ஆர். ராஜலக்ஷ்மி.



### சரியான விடை

உபாத்தியாயர்:—சுலபமான ஒரு கணக்குப் போடுகிறேன். யார் முதலில் சரியான விடை சொல்லுகிறார்கள் பார்க்கலாம். ஒரு மேஜையில் நாலு ஈக்கள் உட்கார்ந்திருந்தன. அதில் ஒன்றை அடித்து விட்டால் மிச்சம் எத்தனை ஈக்கள் மேஜையிலிருக்கும்?

ஐயாசூர்யன்:—(சட்டென்று எழுந்து) ஒன்று சார்.

உபாத்தியாயர்:—எப்படிடா, முட்டாள்?

ஐயாசூர்யன்:—அடி பட்ட ஈ ஸார்.

—சாலமோன் அப்பாத்துரை.



### ஒரே தடவைதான்!

பங்கஜம்:—எங்காத்து மாப்பிள்ளை வந்தால் இரண்டு நாள் கூட இருப்பதில்லை. வருவதும் போவதுமாகத்தான் இருக்கிறார்.

கமலம்:—எங்காத்து மாப்பிள்ளை அப்படியில்லை. இதுவரை ஒரே தடவைதான் வந்திருக்கிறார்.

பங்கஜம்:—அப்படியா?

கமலம்:—ஆமாம்; முதல் தடவை வந்தவர் இன்னும் போகவில்லை.

—எம். கே. சவுண்டப்பன்.



### மறுபடியும் தவறு!

கிட்டு:—நான் விளக்கெண்ணெய் சாப்பிடும் பொழுது எல்லாம், என் உண்டிப் பெட்டியில் எங்கம்மா பணம் போடுவாள்.



ராமு:—உண்டிப் பெட்டி ரொம்பி விட்டால் என்ன செய்வாள்?

கிட்டு:—மறுபடியும் அந்தப் பணத்துக்கு விளக்கெண்ணெய் வாங்கி விடுவாள்!

—ஜி. பி. சாமி.

# இறங்கும் விலைவாசிகளால் நஷ்டமடைய விரும்புவீர்களா?

விலைவாசிகளைக் கவனியாது தங்கமும், வெள்ளியும், நகைகளும், வீடு வாசல்களும், விற்பனைச் சரக்குகளும்தான் சிறந்த முதலீடுகள் என்று நம்பியிருந்த காலமும் உண்டு! ஆனால் அவற்றின் விலை மதிப்புகள் விழ ஆரம்பித்து விட்டன. யுத்தம் முடிந்தவுடனேயே வீண் பீதிக்கு இடங் கொடுத்தவர்கள் அதன் பயனை உணர்வார்கள். அநியாய விலைகளில் "பத்திரமான" முதலீடு தேடிய பல்லாயிரக் கணக்கான புத்தியற்ற மக்கள், விலைவாசிகள் சாதாரண நிலைமைக்கு வரும்போது, தாங்கள் கஷ்டப்பட்டுச் சேமித்த பொருள்களின் மதிப்பெல்லாம் மாயமாக மறைவதைக் காண்பார்கள்.

உங்களுக்கு இக்கதி நேராமலிருக்கும்படி பார்த்துக்கொள்ள வேண்டும். அரும் பாடுபட்டுத் தேடிய பணத்தைக் கொண்டு நாஷனல் சேவிங்ஸ் சர்ட்டிபிகேட்டுகளை வாங்குங்கள். இன்று ரூ. 10 விலையுள்ள இந்த சர்ட்டிபிகேட்டுகள் ஒவ்வொன்றும் 12 வருஷங்களுக்குப் பிறகு, ரூ. 15 உத்திரவாதத்தோடு பெறும். முதல் மூன்று வருஷங்களுக்குப் பிறகு இந்த நாஷனல் சேவிங்ஸ் சர்ட்டிபிகேட்டுகளை எப்பொழுது வேண்டுமானாலும் பணமாக மாற்றிக் கொள்ளலாம். இந்த சர்ட்டிபிகேட்டுகளில் முதலிட்ட தொகைகளுக்கு வருமான வரி கிடையாது. ஒவ்வொருவரும் ரூ. 5,000 வரைக்கும் இந்த சர்ட்டிபிகேட்டுகளை வாங்கலாம்.

**உங்கள் சேமிப்பைக் கொண்டு**

## நாஷனல் சேவிங்ஸ் சர்ட்டிபிகேட்டுகளை

**வாங்குங்கள். பணம் பத்திரமென்ற உறுதியுண்டு**

**இன்றே தொடங்குங்கள்!**

### பதிவு செய்தல் — ஒரு நல்ல முன்னேற்பாடு.

அஸாம், வங்காளம், பீஹார், ஒரிஸா, சென்னை மாகாண வாசிகளின் சௌகரியத்துக்காக, லக்ஷ்மணபுரியில் ஐக்கிய மாகாண போஸ்ட் மாஸ்டர் ஜெனரலின் மேற்பார்வையில் ஒரு மத்தியப் பதிவு ஆபீஸ் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. டிபென்ஸ் சேவிங்ஸ் சர்ட்டிபிகேட்டுகள், தபாலாபீஸ் காஷ் சர்ட்டிபிகேட்டுகள், நாஷனல் சேவிங்ஸ் சர்ட்டிபிகேட்டுகளை வைத்திருப்பவர்கள் தங்கள் சர்ட்டிபிகேட்டுகளின் விபரங்களை இங்கு இலவசமாகப் பதிவு செய்து கொள்ளலாம். இதன் மூலம், சர்ட்டிபிகேட்டுகள் காணாமற் போனாலுஞ் சரி, அழிந்து விட்டாலுஞ் சரி, தங்கள் உரிமையை நிரூபிப்பது சுலபம். பூரா விபரங்களையும் உங்களூர் தபாலாபீஸில் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள்.

**ஸேவிங்ஸ் பாங்கி உள்ள எந்தத் தபாலாபீஸிலும்**
**நாஷனல் ஸேவிங்ஸ் சர்ட்டிபிகேட்டுகளை வாங்கலாம்.**

CPU—421

# வித்தியாசம் அது தான்!

ஸோமாஸ்

ஜில்லா ஜட்ஜ் சுதர்சனம் ஐ. ஸி. எஸ். ஸுக்கும் அவர் புத்திரன் ராஜகம்பீரத்துக்கும் ஒரே ஒரு விஷயத்தில் தான் ஒற்றுமையிருந்தது. அது மூகச் சாயல்தான். பாக்கி விஷயங்களில் எல்லாம் நேர் விரோதந்தான்.

காலணாவைக் கால் ரூபாயாக நினைத்துச் செலவு செய்பவர் சுதர்சனம்; ஒரு ரூபாயை ஒரு அணாவாக நினைத்து ஊதியெறிபவன் ராஜகம்பீரம். அவசியமான செலவைப் பற்றி அரை டஜன் தடவையாவது யோசனை செய்பவர் சுதர்சனம்; அநாவசியமான செலவைப் பற்றி ஒரு தடவைகூட யோசனை செய்யாதவன் ராஜகம்பீரம்.

அவன் சென்னை கிறிஸ்தவக் கலாசாலையில் பி. ஏ. படித்துக் கொண்டிருந்தான். தகப்பனார் எவ்வளவு பணம் அனுப்பினாலும் அவ்வளவுக்கும் ராஜகம்பீரம் சரியான செலவைத் தயாராக வைத்திருப்பான். மாதா மாதம் மேலும் மேலும் பணம் அனுப்பும்படி எழுதி அவரைத் தொந்தரவு செய்வான்.

ஜில்லா கலெக்டரான தம்முடைய மகன், 'பில்' கலெக்டர் வேலைக்குத் தயாராகி வருவதை நினைக்கும் பொழுதெல்லாம் சுதர்சனத்தின் கண்களிலிருந்து கண்ணீர் பெருகும்.

சுதர்சனத்தின் தகப்பனார் பள்ளிக்கூட உபாத்தியாயராயிருந்தவர். தமது சொற்ப வருவாயில் தம் மகனை ஐ. ஸி. எஸ். வரையில் படிக்க வைத்தார். சுதர்சனமும் ரொம்ப சிரமப்பட்டுச் சம்பளமில்லாமல் படித்து ஒரு பரீட்சையில்கூட 'பனால்' ஆகாமல் தேறினார். அப்படிப்பட்டவர் ராஜகம்பீரத்தின் ராஜபோகச் செலவுகளைப் பார்க்கும் போது அவர் மனம் கசப்படையாமல் என்ன செய்யும்?

ஒரு சமயம் விடுமுறையின்போது, ராஜகம்பீரம் தன் தகப்பனாரைப் பார்ப்பதற்காகச் சேலத்துக்கு வந்திருந்தான். அவனுக்குத் தம் நண்பர்களுக்கு மத்தியில் புத்தி சொல்ல நினைத்த சுதர்சனம், "ராஜகம்பீரம்! நான் படிக்கும் பொழுதெல்லாம் எவ்வளவு சிக்கனமாயிருப்பேன், தெரியுமா? என் தகப்பனார் என்னைக் கலெக்டராக்க எவ்வளவு சிக்கனமாகக் கஷ்ட வாழ்க்கை நடத்தியிருக்கிறார் தெரியுமா? சொற்ப சம்பளத்தில் உபாத்தியாயராயிருந்த அவர் ஒழிந்தபோதெல்லாம் என் மேல் படிப்புக்காகப் பையன்களுக்கு 'ப்ரைவேட் டியூஷன்' சொல்லிக்கொடுப்பார். எனக்காக அவர் அப்படியெல்லாம் கஷ்டப்படுவதைப் பார்த்து நான் சிக்கனத்தில் ரொம்ப அக்கறையுடன் இருப்பேன். நீ என்னடா என்றால் டிபனுக்கு மட்டும் போன மாதம் நூறு ரூபாய் செலவு என்கிறாய். இப்படியிருந்தால் நம் குடும்பத்துக்கே அகௌரவமாகப் போய்விடுமே!" என்றார்.

உடனே ராஜகம்பீரம், கம்பீரமாகத் தலை நிமிர்ந்து நின்று கொண்டு, "அப்பா, நீங்கள் சொல்லுவது வேடிக்கையாக இருக்கிறது! நான் செய்யும் ஒவ்வொரு செலவும் நியாயமானது தான். நம் குடும்பத்தின் கௌரவத்தைக் காப்பாற்றத்தான் அவ்வளவு செலவு செய்கிறேன். அப்பா! கொஞ்சம் கவனித்துப் பாருங்கள்: உங்கள் தகப்பனார் பள்ளிக்கூட உபாத்தியாயர். அவருடைய அந்தஸ்துக்குத் தக்கபடி நீங்கள் செய்த சிக்கனச் செலவு சரி. ஆனால் என் தகப்பனார் ஜில்லா கலெக்டர். அவரது அந்தஸ்துக்கு நான் செய்யும் செலவு மிகவும் நியாயமானது" என்றான்.

நண்பர்களெல்லாம், "நியாயம், நியாயம்" என்று சொல்வதைத் தவிர, வேறொன்றும் சொல்ல முடியவில்லை. சுதர்சனம் மாத்திரம் என்ன சொல்வார்? அவரும் நியாயம் என்று சொல்வதைத் தவிர வேறு வழியில்லையல்லவா?



மாமியார்:—அந்த நாடகம் பார்த்ததிலே சிரிப்பாய்ச் சிரித்துப் பாதி உயிர் போய் விட்டது!

மாட்டுப்பெண்:— அப்படியானால் அந்த நாடகத்தை இன்னொரு தடவை போய்ப் பாருங்களேன்!



# ஸ்திரீயின் பெருமையான தொழில்!

காயமடைந்த வீரர்களுக்கும் நோயாளிகளுக்கும் சிகிச்சை செய்வதைக் காட்டிலும் இந்த யுத்த காலத்தில் உயர்ந்த வேலை வேறு என்ன இருக்கிறது? இந்த சிறந்த வீரர்கள் தேர்ச்சி பெற்றவர்களின் ஒத்தாசையையே நம்பியிருக்கிறார்கள். தேர்ச்சி யடைந்த நர்ஸ்கள் இல்லாமல் நமது டாக்டர்களும் அவர்களது வைத்தியமும்—அவர்களிடமுள்ள நோயாளிகளைப் போலவே—பயனற்றுப் போய் விடுவார்கள். தற்காலம் யுத்தத்தின் போக்கு வெகு தீவிரமாகவே யிருக்கிறது. அத்தியாவசியமான இந்த வேலைக்கு மேன்மேலும் ஸ்திரீகள் தேவையாயிருக்கின்றனர்-தாமதம் செய்யாதீர்கள்! உறுதியாக வெற்றியைக் கொண்டுவரும் வீரர்களுக்குச் சிகிச்சை செய்ய முன் வாருங்கள்.

முன் அனுபவம் அவசியமில்லை. வேலையில் சேருமுன் சிறு பயிற்சி அளிக்கப்படுகிறது. ஏற்கனவே நர்ஸ் வேலையில் தேர்ந்தவர்கள் நேரடியாக சேர்ந்து விடலாம். அனுபவமுள்ளவர்களுக்குச் சம்பள உயர்வு அளிக்கப்படும். திருப்திகரமான சேவையின் முடிவில் சன்மானம் வழங்கப்படும். யோக்யதா பத்திரம் பெற்ற நர்ஸ்கள் ஐ. எம். என். எஸ். நிபந்தனைகளுக்குச் சம்மதமில்லாவிடில் விசேஷ நிபந்தனைபடி ஏ. என். எஸ்.-ல் சேரலாம். மற்ற விவரங்களுக்கு உங்கள் டிவிஷனிலுள்ள லேடி சூப்பரின்டென்டென்ட், செயின்ட் ஜான் அம்புலன்ஸ் ப்ரிகேட், ஓவர்ஸீஸ-க்கு எழுதவும். இந்த விலாஸத்தை அறிந்துகொள்ள முடியாமல் போனால் டைரக்டர் ஜெனரல், இந்தியன் மெடிகல் சர்வீஸ், நியூ டெல்லி என்ற விலாஸத்திற்கு எழுதுங்கள்.

# ஏ. என். எஸ்.

(ஆக்ஸிலரி நர்ஸிங் சர்வீஸ்)

இதில் சேர்ந்து இந்தியாவுக்குச் சேவை செய்யுங்கள்.

AAA. 992



# மிருகங்களின் கொலு

—செல்லம்—

மிருகக் காட்சிச் சாலையில் ஒரு நாள் பெரிய பரபரப்பு உண்டாயிற்று. மஹாராஜாவின் அரண்மனைக்குப் போய் விட்டு வந்த மான் குட்டி, தசரா பண்டிகைக்கு வெகு அழகாய்க் கொலு வைத்திருக்கிறார்கள் என்று பெருமை யடித்துக் கொண்டதுதான் காரணம்.

உடனே எல்லா மிருகங்களும் ஓடோடியும் வந்து, கொலுவைப் பற்றி மான் குட்டியை விசாரிக்க ஆரம்பித்தன. மான் குட்டிக்கோ அரண்மனைக்குப் போய் விட்டு வந்த பெருமையினால் நிலை கொள்ள வில்லை. தத்திக் குதித்துத் தாண்டவ மாடிற்று.

“போதும், தாண்டவர், அங்கு எப்படி கொலு வைத்திருந்தார்கள்? எனக்குக் கூட ரொம்ப நாளாய்க் கொலு வைக்க வேண்டுமென்று ஆசை. அம்மாவிடம் கூடச் சொன்னேன். ‘அது மனிதர்கள் கொண்டாடும் பண்டிகை. நமக்கு எதற்கு அதெல்லாம்?’ என்று அவள் சொல்லி விட்டாள். நம்மைப் போன்ற மிருகங்கள் கூடக் கொலுவில் உட்கார்ந்திருக்கிறதாமே, நீ பார்த்தாயா? அவையெல்லாம் விஷமம் பண்ணாமல் சமத்தாயிருக்கிறதா?” என்று கேட்டது சிங்கக் குட்டி.

“நன்றாயிருக்கிறது. நீ சொல்வது எல்லாம் மண் பொம்மைகள்! அவைகளுக்கு உயிரேது? ஆனால் பார்ப்பதற்கு மட்டும் உயிருள்ள மிருகங்கள் போல இருக்கின்றன. அந்தக் கொலுவில் உன்னைப் போலவே ஒரு சிங்கக் குட்டியைப் பார்த்தேன். நீதான் அங்கு வந்திருக்கிறாயோ என்று கூட ஏமாந்து போனேன். அவ்வளவு அழகாயிருந்தது அந்தச் சிங்கக் குட்டி. என் கண்களைப் போல் அழகுடைய கண்களைப் பெற்ற இரு பெண்கள், கொலுவின் முன் நடன மாடினார்கள்!” என்று மான்குட்டி அவர்களைப் போல் நடனமாட ஆரம்பித்து விட்டது. மிருகங்களெல்லாம், “இதென்ன பிரமாதம்? நாமும் தசரா பண்டிகைக்கு கொலு வைக்கலாம். நம்முடைய கொலு எவ்வளவு அழகாயிருக்கும், தெரியுமா?” என்றன.

தானும் அரண்மனைக்குப் போய் கொலு பார்க்க வேண்டுமென்று சிங்கக் குட்டி ஆசைப்பட்டது. மறு நாள் மான் குட்டியுடன் அரண்மனைக்குப் போய் விட்டு வந்த சிங்கக் குட்டி, வீட்டிற்கு வந்ததும், அந்த நிமிஷமே கொலு வைக்க வேண்டுமென்று ஆர்ப்பாட்டம் செய்தது.



“போனவாரம் வாங்கிக் கொண்டு போன குடையை இன்னும் ஏன் திருப்பிக் கொடுக்கவில்லை?”

“எப்படியப்பா கொடுக்கிறது? மழை நின்னா தானே கொடுக்கணும்!”

"பொம்மை எங்கே யிருக்கிறது? நமக்கு என்ன மனிதர்கள்போல் கையிருக்கிறதா, பொம்மை செய்வதற்கு?" என்று அம்மா சொன்னதைக் கூட சிங்கக் குட்டி கேட்கவில்லை. காட்டிலுள்ள மிருகக் குட்டிகளை எல்லாம் "நவராத்திரி கொலு வைக்கப் போகிறேன்" என்று கூப்பிட்டது.

எல்லா மிருகக் குட்டிகளும் புதிது புதிதாக உடை யணிந்து கொண்டு, சிங்கக் குட்டியின் கொலுவைப் பார்ப்பதற்கு வந்தன. கொலு மண்டபம் மிகவும் அழகாக ஜோடித்திருந்தது. யானையும் ஒட்டகமும் சேர்ந்து விதம் விதமான காட்டுப் புஷ்பங்களால் தோரணம் கட்டியிருந்தன. குரங்கு, காட்டிலுள்ள பழங்களையும் தேங்காய்களையும் குலை குலையாகக் கொண்டு வந்து குவித்தது.

உடனே சிங்கக் குட்டி, யானைக் குட்டிகளை வரிசையாகத் தும்பிக்கையைத் தூக்கிக் கொண்டு உட்காரச் சொல்லிற்று. ஒவ்வொரு யானைக் குட்டியின் தும்பிக்கையிலும் வெள்ளை வெளேரென்ற முயல் குட்டிகள் காதை உயர்த்திக் கொண்டு உட்கார்ந்திருந்தன.

அதற்கு அடுத்த வரிசையில் சிங்கக் குட்டிகள் அழகாக ராஜ பார்வை



செட்டியார் :— என்னப்பா இது ஒவித் தியமாப் போச்சி! ஒங்கிட்ட கடன் கொடுத் தூட்டு எத்தினி நாளா அலையறது? ......

செம்படவன் :—கோவிச்சிக்காதிங்க செட்டியாரே! ஆத்துலே தண்ணி வரட்டும், ஒங்களை அலைய உடாமெ பண்ணிடறேன்!

பார்த்துக் கொண்டு நின்றன. அவைகளின் முதுகில் புலிக் குட்டிகள் உட்கார்ந்திருந்தன. அதற்குப் பின்னால் ஒட்டகங்கள் வரிசையாக நின்றன. அவைகளின் முதுகில் கருகருவென்று கரடிக் குட்டிகள் உட்கார்ந்திருந்தன. இரண்டு கோடிக்கும் இரண்டு ஒட்டைச் சிவிங்கிகளை நிற்க வைத்தன.

குரங்குக் குட்டிகள் ஒன்றின் இடுப்பை ஒன்று பிடித்துக் கொண்டு பிறைச் சந்திரன் போல் இந்தக் கோடி மரத்துக்கும், அந்தக் கோடி மரத்துக்கும் ஊஞ்சல் ஆடின. மான் குட்டிகள் கொலுவின் முன் கால் சதங்கை சப்திக்க நடனமாடின. குள்ள நரிகள் குட்டிக் கரணம் போட்டன. கரடிகள் பல கெரடி வித்தைகள் செய்தன.

"பலே, ஜோர்!" என்றது கொலுவைப் பார்க்க வந்த சிங்கக் குட்டியின் தாயார்.

"அவசரப் படாதே, அம்மா! அரண்மனை கொலு மாதிரி ராஜா ராணி உட்கார வேண்டு மல்லவா? அதற்கு இதோ சிம்மாசனம் ஏற்படுத்துகிறேன்!" என்று இரண்டு சிங்கங்களைப் படுத்துக் கொள்ளச் சொல்லி, அவைகளின் மேல் சிங்கக் குட்டி, அப்பாவையும் அம்மாவையும் உட்கார வைத்து மகிழ்ந்தது.

இந்தச் சமயத்தில் மிருகக் காட்சிச் சாலையைப் பார்ப்பதற்காக வந்த ராஜா, "இதென்ன கொலு!" என்றார் ஆச்சரியத்துடன்.

மிருகங்களுக் கெல்லாம் வெட்கமாய்ப் போய்விட்டது. மூலைக்கு ஒன்றாக ஓடிவிட்டன. சிங்கக் குட்டியும் ஒரு மூலையில் ஓடி ஒளிந்து கொண்டது.

அப்பொழுது, "மிருகங்களின் கொலு ரொம்ப ரொம்ப அழகாயிருக்கதல்லவா?" என்று மஹாராஜா மந்திரியைப் பார்த்துக் கேட்டது சிங்கக் குட்டியின் காதில் விழுந்தது. அதைக் கேட்க அதற்கு ரொம்ப ரொம்பப் பெருமையாக இருந்தது.



# எப்பொழுதாவது நீங்கள் பிளாட்பாரத்தில் காத்திருந்ததுண்டா?

அது ஒரு காலம்! பிளாட்பாரங்கள் விசாலமாகவும் அகலமாகவும் இருந்தன. உங்கள் ரயில் வரும் வரை காத்திருக்கவேண்டிய இடம் இருந்தது. ஆனால் இன்று? பெட்டிகளும் பார்சல்களும் எங்கு கண்டாலும் அடுக்கிவைக்கப்பட்டிருக்கின்றன. கால் வைக்கக்கூட இடம் கிடையாது. அப்படியானால் உட்காரவோ, களைப்பாறவோ இடம் ஏது? அப்படி ஒரு இடம் கிடைத்தாலும் அங்குமிங்கும் போய்க்கொண்டிருக்கும் சாமான் ஏற்றும் டிராலிகள் உங்கள் கால்கள் மேல் ஏறிவிடவும் கூடும். அவர்களுக்கு வேலை தலைக்குமேலிருப்பதால் பிரயாணிகளை கவனிக்க அவகாசமே கிடையாது. வெளியேபோய் பலகாரம் முதலியவை வாங்கிவர வேண்டுமானாலும், சாமான்களை தனியாக விட்டுச்செல்லவும் முடியாது; கூலியை அமர்த்தி காவலிருக்கச் சொல்லலாமென்றாலும் கூலிகள் கிடைப்பது மிக அரிது.

மேலும் டிக்கட் வாங்குவது கடினம். வண்டியில் ஏறுவது அதைவிடக் கடினம். இக்கஷ்டங்களுடன் பிரயாணம் செய்வதைவிட சும்மாயிருக்கலாம்.

புத்திசாலித்தனமான காரியத்தைச் செய்யுங்கள். பழைய நிலைமை வரும்வரை வீட்டைவிட்டு வெளியூருக்குக் கிளம்பாதீர்கள். அதுதான் புத்திசாலித்தனமான காரியம்.

## பிரயாணத்தைக் குறையுங்கள்.

AAA 681—TM




# அரைக்கீரை விதைத் தைலம்

●

அரைக்கீரை விதையுடன் 72-வித சரக்குகளும், அநேக பச்சிலைகளும் சேர்த்துத் தயாரிக்கப்பட்டது. இத் தைலத்தை வாரம் இரு முறை தேய்த்து ஸ்நானம் செய்து வர சிரசைப் பற்றிய சகல வியாதிகளைப் போக்குவதுடன் கண் எரிச்சல், கண் மறைப்பு முதலிய கண் சம்பந்தமான வியாதிகளையும், காது குத்தல், காதில் சீழ் வருதல் முதலிய வியாதிகளையும் கண்டிக்கக் கூடியது.

●

தயாரிப்பவர்கள் :

## டி. எஸ். ஆர்.

அண்டு கோ., கும்பகோணம்.

●

மதராஸ் ஸிடி ஏஜெண்டுகள் :

மெஸர்ஸ். புஷ்பவனம் ஸ்டோர்ஸ்

பைக்ராப்ட்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி

●

பாலக்காட்டுக்கு மேல் ஏஜெண்டுகளும்
கோயமுத்தூருக்கு டீலர்களுக்கும்

ஸ்ரீ சதர்ன் இந்தியா ஏஜன்ஸீஸ்

அவநாசி ரோடு — கோயமுத்தூர்



# ஜொலிக்கும்

## கண்கள் . . .

நல்ல ஆரோக்கியத்தை அளிக்கின்றன. உங்களுடைய ஆரோக்கியத்திற்கும் அழகிற்கும், ஸ்திரீகளுக்கென்றே தயாரிக்கப்பட்ட வைடமின் சத்து நிறைந்த சாந்தி - அசோகாவை உட்கொள்ளுங்கள். ஏனெனில் அது வைடமின் சத்து நிறைந்த டானிக் மட்டுமல்லாமல் ஸ்திரீகளின் சகலவிதமான வியாதிகளையும் அறவே அகற்றும் அநேக நூற்றாண்டுகளாகப் புராதனமான அசோகா என்னும் மூலிகையும் சேர்த்துள்ளது.

## சாந்தி அசோகா

சிறந்த கர்ப்பாசய ஔஷதம்

சாந்தி நகரம், தணுகு, மேல்கோதாவரி ஜில்லா

சோல் ஏஜண்டுகள் :

ஸ்ரீ நிருஸிம்ஹ ஜெனரல் ஸ்டோர்ஸ், தணுகு

தென் இந்தியாவிற்கு ஏஜண்டுகள் :

ஸ்மிட் ஜோர்ம், செல்ஸ் & ஸன்ஸ்,

3, பந்தர் தெரு, ஜி. டி. மதராஸ்.



# ஆடல் பாடல்



"கர்நாடகம்"

## பூம்பாவை

"பூம்பாவை" என்னும் தமிழ்ப் படம் எடுக்கிறார்கள் என்று தெரிந்ததும் எனக்கு ஒரே துக்கமாயிருந்தது. "பூம்பாவை" என்பது எத்தனை அழகான பெயர்? கதைதான், எவ்வளவு புனிதமான தமிழ்க் கதை? — அதை எப்படியெல்லாம் குட்டிச்சுவராக்கப் போகிறார்களோ, என்ன மாதிரியெல்லாம் விரஸப்படுத்தப் போகிறார்களோ என்று வருத்தமாயிருந்தது.

தமிழ்ப் படம் என்றாலே மனத்தில் திகிலுடனேதான் போகவேண்டியிருக்கிறதல்லவா? என்ன அவலட்சணம் அல்லது விரஸம் வந்துவிடப் போகிறதோ என்று ஒவ்வொரு நிமிஷமும் பயந்து நடுங்கிக் கொண்டே பார்க்க வேண்டியிருக்கிறதல்லவா?

பிரசித்தி பெற்ற கலாசாலை ஆசிரியர் ஒருவர் — பிரின்ஸ்பால் உத்தியோகம் பார்த்து விலகியவர் — ஒரு சமயம் என்னிடம் சொன்னார் :—"தமிழ்ப் படம் ஒன்றுக்குப் போயிருந்தேன். நீர் ஏதோ அருமையின் பேரில் அதைப் பற்றிக் கேவலமாக எழுதியிருப்பதாகச் சிலர் சொன்னார்கள். அதன் உண்மையைக் கண்டுபிடிக்க வேண்டுமென்று எண்ணித்தான் போனேன். படம் ஆரம்பித்துச் சற்று நேரத்துக்கெல்லாம் இங்கு ஏன் வந்தோம் என்று இருந்தது. நாம் வந்திருப்பதை யாராவது பார்த்துவிடப் போகிறார்களே என்று அவமானமாயிருந்தது. 'இண்டர்வல்' வெளிச்சம் போடுவதற்கு முன்னால் போய்விட வேண்டுமென்று தீர்மானித்து, கள்ளுக் கடைக்குப் போனவனைப் போல் தலையில் துணியைப் போட்டுக் கொண்டு கிளம்பினேன் !"

இம்மாதிரி அனுபவம் இன்னும் அநேகம் பேருக்குத் தமிழ்ப் படம் பார்க்கும் போது ஏற்பட்டிருக்கும்.

ஆனால் "பூம்பாவை" படத்தில் அம்மாதிரி அவமானப்பட வேண்டியிராது என்று பலர் சொல்லக் கேட்டபோது எனக்கு மிகவும் உற்சாகமாயிருந்தது. முதலில் ஏற்பட்ட வருத்தத்தைப் போக்கிக் கொள்வதற்காகவாவது அந்தப் படத்தைப் பார்த்து விட்டு வரவேண்டுமென்று எண்ணினேன்.

படத்தைப் பார்த்த பிறகு பொது ஜன அபிப்பிராயத்தில் என்னுடைய நம்பிக்கை மேலும் உறுதியாயிற்று.

• • •

ஒரு விஷயம் நல்ல விஷயமா, அதைப் பொது ஜனங்கள் விரும்புகிறார்களா என்பதை அதைச் சுற்றிக் கூடும் கூட்டத்தைப் பார்த்து மட்டுமே நிர்ணயித்து விடக் கூடாது.

பட்டணத்துச் சாக்கடையில் ஒருவன் தவறி விழுந்து விட்டான் என்று வைத்துக் கொள்வோம். "அது என்ன கூத்து?" என்று பார்ப்பதற்காக அங்கே ஒரு கூட்டம் சேர்ந்து விடுவது சகஜம். சற்று நேரம் வேடிக்கை பார்ப்பதும் இயல்பு. இதனால் கூட்டத்திலுள்ளவர்கள் எல்லாரும் சாக்கடையில் விழ விரும்புகிறார்கள் என்று ஏற்படாது. நிற்கும் போது மூக்கைப் பிடித்துக்கொண்டு முகத்தைச் சுளுக்கிக் கொண்டுதான் நிற்பார்கள். போகும் போதும் அருவருப்புடனேதான் போவார்கள்.

விஷயம் தெரிந்து கொள்வதற்காகக் கூட்டம் கூடும் மனித இயல்பைப் பயன் படுத்திக் கொண்டு, சிலர் பணம் பண்ணப் பார்க்கலாம்; அதில் வெற்றியும் அடைந்து விடலாம்.



ராமச்சந்திரன்
"மச்சான்"

ஆனால் அசங்கியமான விஷயங்களை நல்ல விஷயங்கள் என்றோ, அவற்றைப் பார்ப்பதற்கு ஜனங்கள் ஆசைப் படுகிறார்கள் என்றோ ஏற்பட்டு விடாது.

சாக்கடையில் விழுந்தவனை வேடிக்கை பார்க்க, அதிவிரைவில் பெருங் கூட்டம் கூடலாம்; ஆனால் அவ்வளவு சீக்கிரத்தில் கூட்டம் கலைந்தும் விடும்.

பூந்தோட்டத்துக்குப் பெருங் கூட்டமாக ஜனங்கள் வரா விட்டாலும், வெகு காலம் வந்து கொண்டிருப்பார்கள். நீடித்த காலக் கணக்குப் பார்த்தால், பூந்தோட்டத்துக்கு வருகிறவர்கள்தான் அதிகமாயிருப்பார்கள்.

இதையெல்லாம், நாகரிக மடைந்த ஜன சமூகத்தை உத்தேசித்துத்தான் சொல்கிறேன்.

தமிழ் மக்கள் நாகரிக மடைந்தவர்கள் என்பதில் எனக்கு எள்ளளவும் சந்தேகமில்லை.

எனவே, "பூம்பாவை" என்னும் படத்தை எடுத்தவர்களுக்கு நான் பெரிதும் நன்றி கூறுகிறேன்.

அசங்கியமும் விரஸமும் இல்லாத தமிழ்ப் படத்தை யாராவது கொண்டு வந்தால் அதற்காகவே அவர்களுக்கு நன்றி செலுத்துதல் இந்த நாளில் அவசியமாய்ப் போயிருக்கிறதல்லவா?

• • •

சைவம் தழைக்க வந்த ஞான சம்பந்தரின் புனித சரித்திரத்தில் ஒரு சம்பவம், பூம்பாவைக் கதை.

மயிலாப்பூரில் ஒரு செட்டியாரின் மகள் பூம்பாவை. சம்பந்தரின் தெய்விக வாழ்க்கையையும் பாடல்களையும் பற்றி அவள் அறிகிறாள். அவர்மீது காதல் கொள்கிறாள். அவரையே மணந்து கொள்ள உறுதி கொள்கிறாள். பாம்பு கடித்துச் சாகிறாள். அவளுடைய உடலை எரித்த பிறகு எலும்புகளை எடுத்துப் பானையில் போட்டு வைத்திருக்கிறார்கள். ஞான சம்பந்தர் திருமயிலைக்கு வந்தபோது, பானையிலிருந்த எலும்பு பூம்பாவையாக உயிர் பெற்று எழுகிறது. அவ்விதம் தம்மால் உயிர் கொடுக்கப் பெற்ற பெண்ணை "மகளே!" என்று சம்பந்தர் அழைக்கிறார். பூம்பாவையின் காதல் கொண்ட நெஞ்சம் உடைந்து உருகுகிறது!

இந்தப் பக்தி ரஸமுள்ள கதையைக் கூடிய வரை நல்ல முறையில் படமாக்க முயன்றிருக்கிறார்கள். அம் முயற்சியில் ஓரளவு வெற்றி பெற்றிருக்கிறார்கள்.

பால சம்பந்தராக நடித்திருக்கும் குழந்தைப் பிள்ளை இந்தப் படத்தில் முதல் ஸ்தானத்தைத் தட்டிக் கொண்டு போய் விடுகிறான். "பாலருவாயர்" என்று பெயர் பெற்ற ஞானக் குழந்தையின் முகத்தில் உண்மையாகவே பால் வடிகிறது!

பெரிய சம்பந்தராக நடித்திருக்கும் ஸ்ரீ கே. ஆர். ராமசாமி சுமாராகப் பாடிப் பேசி நடித்திருக்கிறார். அவரைப் படத்தில் இன்னும் நன்றாய்ப் பயன்படுத்திக் கொண்டிருக்கலாம்.

பூம்பாவையாக நடித்திருக்கும் குமாரி ஜீவரத்தினத்தின் பெயர் சில காலமாகப் பிரபலமாகியிருக்கிறது. "பூம்பாவை"யைப் பார்த்தபின், அவர் அடைந்திருக்கும் புகழுக்கு உரியவர்தான் என்று தோன்றியது. முகத்திலே குறுகுறுப்பும் களையும், நடிப்பில் ஜீவனும் இருக்கின்றன. பேச்சும் பளிச்சென்று இருக்கிறது.

பூம்பாவையின் தந்தையாக நடித்திருக்கும் ஸ்ரீ சாரங்கபாணி, தாம் ஹாஸ்ய நடிகர் ஆயிரா விட்டால், சோக ரஸ நடிகராகவும் சிறந்த பெயர் பெற்றிருக்கக் கூடுமென்று நிரூபித்திருக்கிறார்.

செட்டியாரின் இளைய மனைவியின் சகோதரனாக நடித்திருக்கும் ஸ்ரீ ராமச்சந்திரன், "சபாபதி"க்கு அடுத்தபடியாக இந்தப் படத்திலே வெளுத்து வாங்கியிருக்கிறார்.

கதைக்குச் சம்பந்தமில்லாத 'காமிக்' ஒன்று இருக்கிறது. இதில் ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணனும், ஸ்ரீமதி டி. ஏ. மதுரமும் நடித்திருக்கிறார்கள். "பூம்பாவை"ப் படத்தின் தரத்துக்கேற்ப அவர்களும் தூய்மையான ஹாஸ்ய கட்டங்களில் உயர்தரமாக நடித்திருக்கிறார்கள்.



ஜீவரத்தினம் "பூம்பாவை"

இந்தப் படத்திலே வரும் ஹாஸ்ய கட்டங்களில் எல்லாம் பூரணத் திருப்தி ஏற்படுகிறது. மற்ற இடங்களில் சுமாரான திருப்தி உண்டாகிறது.

ஒரு முக்கியமான இடத்தில் பெரும் ஏமாற்றம் அடைகிறோம். எலும்பு பெண்ணாகும் கட்டம் எவ்வளவோ நன்றாக, பார்ப்பவர்கள் மயிர்க்கூச்சு எறியும் படியாக, எடுக்

கப் பட்டிருக்க வேண்டும். அப்படி இல்லை.

பாலைக்குள்ளே எலும்புக் கூட்டைக் காட்டி அருவருப்பை உண்டு பண்ணியிருக்க வேண்டியதில்லை.

சம்பந்தர் இச்சா சக்தி, கிரியா சக்திகளைப் பற்றிப் பேசும் கடைசிப் பிரசங்கம், அவருக்காவது அர்த்தமாகி யிருக்குமென்று நம்புகிறேன்!

மற்றப்படி, பூம்பாவை தமிழ்ப் படங்களுக்குள் ஒரு நல்ல படம். ஆண்கள், பெண்கள், குழந்தைகள் பார்க்கக் கூடிய விரஸமற்ற படம்.

இத்தகைய படத்தைக் கொண்டுவந்ததற்காக லியோ பிலிம்ஸ் கம்பெனிக்காரர்களுக்கு வாழ்த்துக் கூறுகிறேன்.



கே. ஆர். ராமசாமி
"ஞான சம்பந்தர்"

## மூன்று இசைத் தட்டுகள்

செம்பை வைத்தியநாத பாகவதருக்கு இணையான கம்பீர வெண்கல நாத சாரீரத்தை உடைய ஸ்ரீ துறையூர் ராஜகோபால சர்மா இசைத் தட்டில் பாடியிருக்கும் "உண்டு குல தெய்வ ராமன்" என்னும் தோடிக் கீர்த்தனையைக் கேட்பவர்களுக்கு இம்மையிலும் மறுமையிலும் சுகம் உண்டு. துறையூர் சர்மாவின் நாலு கட்டை சுருதியுடைய சாரீரச் சிறப்பு ஒருபுற மிருக்க, சங்கீத வித்தையையும் அவர் முறையாக குருகுல வாசம் செய்து நன்கு பயின்றவர். பெயர் பெற்ற நாமக்கல் நரஸிம்ம ஐயங்காரின் சிஷ்யர். சாஹித்யத்தை வெகு ஸ்பஷ்டமாக உச்சரித்துப் பாடக் கூடியவர். அவருடைய சங்கீத பாணியின் சிறப்புகள் அவ்வளவும் இந்த இசைத் தட்டிலும் வெளியாகி யிருக்கின்றன.

ஆனபோதிலும் ஸ்ரீ சர்மாஜி "கோ-தண்ட பாணி எனும் நிஜசரண்யன்" என்னும் இடத்தில் நிரவல் செய்யாமல், "தொண்டு செய்து ராமா ராமா" என்று நிரவல் செய்திருந்தால், நமது செவிகளுக்குச் செய்த தொண்டா யிருந்திருக்கும்; அவருக்கும் புண்ணியம் உண்டாகி யிருக்கும்.

சர்மாவின் சங்கீத வித்தைத் திறமையை நன்கு எடுத்துக் காட்டும் முறையில் ஸ்ரீ சௌடய்யாவும் பாலக்காட்டு மணியும் பக்க வாத்தியம் வாசித்திருக்கிறார்கள்.

இந்த G E 6144 நம்பர் இசைத் தட்டு கொலம்பியா வெளியீடு. கிடைக்குமிடம்: ஸரஸ்வதி ஸ்டோர்ஸ், சென்னை.

●

சுவாமி சுத்தானந்த பாரதியாரின் அருமையான திருவாக்கைக் கொண்ட இரண்டு இசைத் தட்டுகளை எச். எம். வி. கம்பெனியார் வெளியிட்டிருக்கிறார்கள்.

"கோயிலும் சாமியும்" என்னும் பெயர் கொண்ட நம்பர் 18228 இசைத் தட்டு மிகவும் தனிமையான முறையில் அமைந்திருக்கிறது. இதிலே கர்நாடக சங்கீதம், ஹிந்துஸ்தானி சங்கீதம், இங்கிலீஷ் சங்கீதம் எல்லாம் கலந்திருப்பதாய்த் தோன்றுகிறது. பாட்டும் வசனமும் பிரார்த்தனையும் பிரசங்கமும் சேர்ந்து நம்மை ஒரே தாக்காகத் தாக்குகின்றன!

ஒரு பக்தர் கோயிலுக்குப் போகிறார். கோயிலில் பூஜை நடந்து கொண்டிருக்கிறது. மணி ஓசை கேட்கிறது; வாத்திய முழக்கம் கேட்கிறது; தோத்திரம் பாடல்கள் கேட்கின்றன; இவற்றுடன், "யார் நீ! எந்த சாதி? கிட்ட வராதே! போ! போ!" என்ற குரலும் கேட்கிறது.

கோயிலுக்குப் போன பக்தர் அங்கே "பணத்தைக் கண்டேன்; பக்தியைக் காணேன்; குருக்களைக் கண்டேன்; கோயிலைக் காணேன்" என்று சொல்லிக்கொண்டு ஏமாற்றத்துடன் திரும்புகிறார். "நானே கடவுள்" என்கிறது வானொலி; "நானே தெய்வம்" என்கிறது இருதய ஒலி.

இந்தப் புது முறை இசைத் தட்டில் ஸ்ரீ தண்டபாணி தேசிகர் அவருக்குச் சொந்தமான பாணியில் அருமையாகப் பாடியிருக்கிறார்; உணர்ச்சி ததும்பப் பாடியிருக்கிறார்.

●

நம்பர் 18229 இசைத் தட்டில் சுவாமி சுத்தானந்த பாரதியாரின் மற்றொரு பொருள் பொதிந்த பாடலை ஸ்ரீமதி வஸந்த கோகிலம் பாடியிருக்கிறார். இது பாட்டின் இலட்சணத்தை அழகாக எடுத்துக் கூறும் பாட்டு.

"ஆர்வத்தியால் அன்புள்ளுருகி
அருவி போல வருவது பாட்டு"

என்கிறார் பாரதியார். இன்னும், நல்ல பாட்டிலே, குரலும் சுருதியும் கூடிக் குழைய வேண்டுமாம்! பாட்டின் கருத்து பளிச்சென்று விளங்க வேண்டுமாம்! கேட்டால் உள்ளம் குளிர்ச்சி கொள்ள வேண்டுமாம்! நவரஸ பாவனை நயமுறச் சேர வேண்டுமாம்!

இவ்வாறு பாட்டின் இலட்சணங்களைக் கூறும் பாட்டை, "பரவையும் வஸந்தப் பறவையும்" சேர்ந்து பாடுவதுபோல ஸ்ரீமதி வஸந்த கோகிலம் தமது இனிமை ததும்பும் குரலில், கானடா, பிலஹரி, ஹம்ஸாநந்தி, காபி ஆகிய ராகங்களில் அழகாகப் பாடியிருக்கிறார். பிலஹரி ராகத்தில் சாதாரணமாய் நாம் சம்பிரதாய வித்வான்களிடம் கேட்க முடியாத சற்றே அபூர்வமான ஒரு பிடியைக் கையாண்டிருக்கிறார். அந்தப் பிடியில் பிலஹரி ராகமே மூச்சுத் திணறிப் போகிறது!

"இன்பப் பொருளே இசையின் பயனும்" என்று பாட்டு முடிகின்றது.

அப்படியானால் செவிக்கின்பம் நன்கு அளிக்கும் இந்த இசைத் தட்டு பயன் பெற்றது என்பதில் ஐயமில்லை.



# கம்பர் தரும் காட்சி

டி. கே. சி.

## 77. அன்புக்கும் எல்லையுண்டோ!

கேகய நாட்டிலிருந்து புறப்படும் போது ராமனைப் பற்றியும் அவனுடைய அழகான வாழ்க்கையைப் பற்றியும் ஒரே கனவு பரதனுக்கு. சப்ர மஞ்சக் கட்டிலில் இராமன் படுத்திருப்பது எவ்வளவு அழகாக இருக்கும் என்றெல்லாம் மனக் கண்முன் பார்த்து அநுபவிப்பான். அந்தப் பரதன் இப்போது என்னத்தைப் பார்க்கிறான்?

காட்டில் குகன் காட்டிய கல்லையும் அதன் மேல் விரித்திருந்த புல்லையும் பார்க்கிறான். இதிலேதான் படுத்திருந்தாய் ராமன் என்கிறான் குகன். கல்லையும் புல்லையும் பார்க்கச் சகிக்குமா பரதனுக்கு? அலறுகிறான்!

'இயன்ற(து)என் பொருட்டினால் இவ்
இடர்உனக்(கு) என்றபோழ் தும்;
அயின்றனை கிழங்குங்கா யும்
அமிர்தென; அரியபுல் லில்த்
துயின்றனை எனவும்; ஆ வி
துறந்திலென், — சுடருங்கா சு
குயின்றுயர் மகுடஞ்சூ டும்
செல்வமும் கொள்வான்யா னே!'

[இயன்றது என் பொருட்டினால் இவ் இடர்: என் பொருட்டினாலேயே இந்தக் கஷ்டம் உனக்கு நேர்ந்தது: அயின்றனை: தின்றாய்; சுடரும் காசு குயின்று: பிரகாசமுள்ள ரத்தினங்கள் பதிக்கப் பெற்று: மகுடம் சூடும் செல்வமும் கொள்வான்: முடிசூடி அதோடு சேர்ந்துள்ள ராஜ்யத்தையும் கைப்பற்ற வேண்டும் என்ற எண்ணம் கொண்டே: ஆவி துறந்திலேன்: உயிரை விடவில்லை!]

மனம் புழுங்கின நிலையில் நகைத்துச் சொல்லும் வார்த்தைகள்,

சுடருங்கா சு
குயின்றுயர் மகுடஞ்சூ டும்
செல்வமும் கொள்வான்யா னே!

என்பவை.

மேலும் குகனிடம் விசாரிக்கிறான். என்ன விசாரிக்கிறான்?

நான்தர நிவந்ததோ ளான்
பின்னரும் சொல்லுவான், 'அந்
நீண்டவன் துயின்றசூ ழல்
இதுஎனில், — நிமிர்ந்தநே யம்



# பள்ளிக்கூடம் வேண்டாம்!

## ‘நாடோடி’

*[குறிப்பு :—இந்திய வைத்தியப் பள்ளிக்கூடம் தான் வேண்டாம் என்கிறேன். ஆனால் அது ‘இந்திய மெடிகல் காலேஜ்’ என்ற புதுப் பெயர் சூட்டிக்கொள்ளட்டும்.]*

இந்திய வைத்தியப் பள்ளிக்கூட மாணவர்களைப் போன்ற பைத்தியக்காரர்களை நான் இதுவரை பார்த்ததே கிடையாது. எங்கேயாவது மாணவர்கள் என்று பெயர் வைத்துக்கொண்டிருக்கும் எவனாவது பள்ளிக் கூடத்தை மூடிவிட்டானே என்று வருத்தப்படுவானா? உலகத்தில் எந்த பாகத்தை எடுத்துக் கொண்டாலும் சரி, தாங்களே வலுவில் பள்ளிக்கூடம் போகவேண்டும் என்று துடியாய்த் துடிக்கும் மாணாக்கர்களைக் காணவே முடியாது. ஏனெனில் இது மாணவ தர்மத்துக்கே விரோதம். இது அடுக்காது. தகாது. தர்மமாகாது. நியாயமாகாது. இருந்தும் இந்த அதிசயத்தைச் சென்னை இந்திய வைத்தியப் பள்ளிக்கூட மாணவர்களிடையில் காண்கிறோம்.

தங்களுக்கு உள்ள ஏதோ சில குறைகளை நிவர்த்திக்கும்படி இந்த மாணவர்கள் சென்ற ஒரு வருஷமாகச் சர்க்காரைக் கேட்டு வந்தார்களாம். இவர்கள் மாற்றி, மாற்றி அனுப்பிய மகஜர்களை யெல்லாம் சர்க்கார் காதிலே போட்டுக்கொள்ளவில்லையாம். “தங்கள் மகஜர் கிடைத்தது” என்று கூடப் பதில் போடவில்லையாம். “ஏன் இப்படிக் காகிதத்தை வீணாக்குகிறீர்கள்?” என்று கூடக் கேட்கவில்லையாம்.

ஆகவே மாணாக்கர்கள் வேறு வழியில்லையென்று வேலை நிறுத்தம் செய்தனர். உடனே சர்க்கார் ‘பள்ளிக்கூடத்தை மூடு’ என்று உத்தரவிட்டு விட்டார்கள். சர்க்கார் மூடச் சொன்னதுதான் தாமதம்; பிரின்ஸ்பால் (பள்ளிக்கூடம் என்றதும் தலைமை அதிகாரியின் பெயர் ஹெட் மாஸ்டர் என்றல்லவா இருக்க வேண்டும் என்று நீங்கள் நினைக்கலாம். ஆனால் இங்கே அவர் பிரின்ஸ்பால் தான்.) பள்ளிக்கூடத்தை இழுத்துச் சாத்தி மூடி, மாணவர்களையும் ஹாஸ்டலை விட்டு வெளியேறும்படி உத்தரவிட்டு விட்டார்.

பிரின்ஸ்பால் பள்ளிக்கூடத்தை மூடினதும், நிஜ மாணாக்கனாக இருந்தால் என்ன செய்திருப்பான்? உடனே சந்தோஷத்தால் துள்ளிக் குதித்திருப்பான். “இதோ புறப்பட்டு விட்டேன்” என்று ஊருக்குத் தந்தி அடித்திருப்பான். தந்தி போய்ச் சேர்வதற்கு முன்னால் தான் ஊர் போய்ச் சேர்ந்திருப்பான்.

ஆனால் இந்தப் பைத்தியக்கார இந்திய வைத்தியப் பள்ளிக்கூட மாணவர்கள் இந்த மாதிரி ஒன்றும் செய்யாமல் தங்கள் பள்ளிக்கூடத்தைத் திரும்பவும் திறப்பதற்கு என்ன வழி என்று மூளையைக் குழப்பிக் கொண்டிருக்கிறார்கள். பொதுஜன ஆதரவை எப்படிச் சேகரிக்கலாம் என்று மண்டையை உடைத்துக் கொண்டிருக்கிறார்கள்!



“இந்தக் கோட்டு நன்றாய்த் தைத்திருக்கிறதே! அந்தத் தையற்காரன் விலாசத்தைச் சொல்லுகிறாயா?”

“பேஷாய்ச் சொல்லுகிறேன். தயவு செய்து என் விலாசத்தை மட்டும் அவனிடம் சொல்லி விடாதே!”

மாணவர்கள் வேலை நிறுத்தம் செய்ததும் சர்க்கார் அது விஷயத்தில் தலையிட்டு, மாணவர்களின் குறைகளைத் தீர்க்க முற்பட வேண்டாமா என்று சில பத்திரிகைகள் கேட்கின்றன.

மாணவர்கள் தான் பைத்தியக்கார மாண

வர்களாய் இருக்கிறார்கள் என்றால் இந்தப் பத்திரிகைகளும் இப்படிப் பைத்தியக்காரத்தனமாக எழுத வேண்டுமா என்று கேட்கிறேன்!

பத்திரிகைகள் கேட்டுக் கொள்வது போல் சர்க்கார் நடந்து விட்டால், ஜனங்கள் சென்னை மாகாணத்தில் பொறுப்புள்ள சர்க்கார்தான் ஆட்சி புரிகிறது என்று தவறுதலாக நினைத்து விட்டால் சர்க்கார் என்ன செய்வது? சென்னை அமைச்சர்கள் தங்கள் முகத்தை எங்கே வைத்துக் கொள்வது? செக்ஷன் 93 ஆட்சிக்கும், பொதுஜன ஆதரவு பெற்று நடக்கும் சர்க்காருக்கும் உள்ள வித்தியாசத்தை ஜனங்களுக்கு அடிக்கடி நினைவூட்டிக் கொண்டிருப்பது சர்க்காரின் கடமை யல்லவா?

ஆகவே சென்னை சர்க்கார் இந்திய வைத்தியப் பள்ளிக்கூடத்துக்குப் பூட்டுப் போட்டதுதான் சரி.

மாணவர்கள் தாங்கள் வேலை நிறுத்தம் செய்ததற்கு முக்கியமாகக் கூறும் காரணம் பள்ளிக்கூடத்தில் பாடங்கள் சரியாகப் போதிக்கப்படவில்லை என்பதாகும். சில மாணவர்களை நேரிலே கண்டு கேட்டதற்கு, "பாடம் முழுவதும் நடத்துவது கிடையாது. எம். பி. பி. எஸ். ஸுக்கு நடக்கும் பாடங்களை எல்லாம் எங்களுக்கு நடத்துகிறார்கள். ஆனால் அதற்குத் தகுந்த பயிற்சிகள் கொடுப்பதில்லை. தகுந்த பயிற்சி இல்லாததால் எங்களுக்கு பரீட்சையில் பதில் சொல்ல முடியவில்லை. இதைப்போல அநியாயம் உண்டா?" என்று கேட்டார்கள்.

எனக்கு என்னவோ இதில் அநியாயம் எதுவும் இருக்கிறதாகத் தெரியவில்லை. நானாக இருந்தால் பாடத்தைக் குறைவாக நடத்துகிறார்களே என்று சந்தோஷப்படுவேனே யொழிய வருத்தப் பட மாட்டேன். எவ்வளவுக் கெவ்வளவு குறைவாகப் பாடம் நடத்துகிறார்களோ, அவ்வளவுக் கவ்வளவு படிக்க வேண்டிய சிரமம் குறைவு, சினிமா நாடகம் முதலியவற்றைப் பார்ப்பதற்கு வேண்டிய அவகாசம் அதிகம் என்று இந்த மாணுக்கர்களுக்குத் தெரிய வேண்டாமா? பின்னால் டாக்டர் என்று போர்டை மாட்டிக் கொண்டு தவிக்கப் போகிறதுதான் தவிக்கப் போகிறோம், இப்பவாவது, பள்ளிக்கூடத்தில் படிக்கும் காலத்திலாவது, டிராமா சினிமா பார்த்துக்கொண்டு சௌக்கியமாக இருப்போம் என்று இந்த மாணுக்கர்களுக்கு ஏன் தெரியவில்லை?

"அப்படியிருந்தால் பரீட்சையில் தேற வேண்டாமா? போன வருஷப் பரீட்சையில் நூற்றுக்குப் பத்து பேர் தானே தேறியிருக்கிறார்கள்?" என்று மாணவர்கள் கேட்கலாம். பரீட்சையில் தேறி இந்த மாணவர்கள் என்ன பண்ணப்போகிறார்கள் என்று கேட்கிறேன்?

ஆங்கில வைத்தியத்தில் தேறுகிறவர்களுக்குக் கிடைக்கிற சலுகைகள் தங்களுக்குக் கிடையாது என்று இவர்களுக்கு முன்னும் பள்ளிக்கூடத்தைவிட்டு வெளிச் சென்ற வைத்தியர்கள் குறை கூறிக் கொண்டிருக்கிறார்கள். ராணுவத்தில் ஆங்கில வைத்தியம் படித்தவர்களுக்குக் கிடைப்பது டாக்டர் வேலை, இவர்களுக்குக் கிடைப்பது கம்பௌண்டர் வேலைதான் என்று வருத்தப்படுகிறார்கள். இப்படியிருக்கும்போது இவர்களும் தேறி வெளியே வந்து, கூட்டத்தோடு கோவிந்தாவாகச் சேர்ந்து என்ன செய்யப் போகிறார்கள் என்று கேட்கிறேன்.

அவசரப்பட்டுப் பரீட்சையில் தேறாமல் பள்ளிக்கூடத்திலேயே இருப்பதில் இன்னொரு சௌகரியமும் இருக்கிறது. பள்ளிக்கூடத்தில் படிக்கும் மாணவர்கள் எல்லாரும் முக்கால்வாசி கல்யாணப் பருவத்தில் இருப்பவர்கள். இவர்களுக்குக் கல்யாண மார்க்கெட்டில் கிராக்கி பள்ளிக்கூடத்தில் இருக்கும்போது அதிகமே யொழிய, பள்ளிக்கூடத்தை விட்டு விலகிய பிறகு அல்ல. பள்ளிக்கூடத்தை விட்டுத் தேறி, வெளியே வைத்தியர் என்ற போர்டை மாட்டிக்கொண்டு விட்டால் இவரால் இன்னதான் சம்பாதிக்க முடியும் என்று எல்லாருக்கும் தெரிந்து விடும். ஆனால்



பள்ளிக்கூட மாணாக்கராய் இருந்தாலோ, இவர் பின்னால் என்னதான் பண்ணுவார் என்று யாராலும் சொல்ல முடியாது. ஆகவே பெண்ணை வைத்துக் கொண்டிருப்பவர்கள் மாணாக்கர்களுக்கு அதிக வரதக்ஷிணை கொடுக்க முன் வருவார்களே யொழிய வைத்தியர் என்று பட்டம் பெற்று, போர்டை மாட்டிக் கொண்டிருக்கிறவர்களுக்குக் கொடுக்க முன்வர மாட்டார்கள்.

ஆனால் இந்த யோசனை யெல்லாம் இந்த மாணவர்களுக்கு எங்கே உதிக்கப் போகிறது? ஏன் எங்களுக்கு முழுப் புஸ்தகமும் நடத்தவில்லை, ஏன் அதற்கு வேண்டிய சரியான பயிற்சி அளிக்கவில்லை, ஏன் சீக்கிரம் பள்ளிக்கூடத்தை விட்டு அனுப்பவில்லை என்று கேட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

சென்னை சர்வகலாசாலையார் நடத்தும் பரீட்சைகளில் அஞ்சோ, பத்தோ, பணத்தைக் கட்டி, ஒவ்வொரு பாடத்திலும் நமக்கு எவ்வளவு மார்க் கிடைத்திருக்கிறது என்று தெரிந்து கொள்ள வழி இருக்கிறது.

ஆனால் இந்த மாணவர்கள் விஷயத்தில் இந்த மாதிரி பணம் கட்டி மார்க் தெரிந்து கொள்ளும் முறையே கிடையாதாம். இதை ஒரு குறையாக இந்த மாணவர்கள் எடுத்துக் காட்டுகிறார்கள்.

இவர்கள் மார்க்-விஷயமாக அனுசரிக்கப்படும் இந்த முறையில் உள்ள ஒரு அனுகூலம் இந்த மாணாக்கர்களுக்குத் தெரியாது என்றே நினைக்கிறேன்.

நான் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த காலையில், ஏதாவது ஒரு பரீட்சையில் தவறிவிட்டது என்று வைத்துக் கொள்ளுங்கள், "ஒரே ஒரு மார்க்கில் போய் விட்டது, ஸார்" என்று பெருமையாகச் சொல்லிக் கொள்ள முடியாது. ஏனெனில் நமக்கு வேண்டாதவன் உடனே பணத்தைக் கட்டி மார்க் என்ன வந்திருக்கிறது என்று தெரிந்து கொண்டு நம் குட்டை உடைத்து விட்டு விடுவான்.

ஆனால் இந்திய வைத்தியப் பள்ளிக்கூட மாணவர்கள் மார்க்கை யாரும் பணம் கொடுத்துக் கண்டு பிடித்துவிட முடியாது. ஆகவே, அவர்கள் எப்பொழுதும் பெருமையாக, "ஒரே ஒரு மார்க்கில் போய் விட்டது ஸார்" என்று சொல்லிக் கொள்ளலாம்.

ஆனால் அது தெரியாமல் அந்த மாணவர்கள் இதையும் ஒரு குறையாகக் குறிப்பிட்டிருக்கிறார்கள்!

இப்படிப்பட்ட அசட்டு மாணவர்களைக் கட்டிக்கொண்டு பள்ளிக்கூடம் நடத்துவதை விடப் பள்ளிக்கூடத்துக்குப் பூட்டுப் போடுவதுதான் சரி என்று சர்க்கார் தீர்மானித்ததில் என்ன தவறு என்று கேட்கிறேன்?

செக்ஷன் 93 ஆட்சிதான் நடக்கிறது என்று காண்பிப்பதற்காக, ஒன்று அல்ல, இரண்டு அல்ல, 93 பூட்டுகளே போட்டாலும் தகும்!

# வட்ட மேஜை

புது டில்லி
13—9—44

டெல்லி சிம்லாவில் செப்டம்பர், அக்டோபர் மாதங்களைச் சுகமான மாதங்கள் என்று சொல்லுவார்கள். அதற்கு ஏற்றதாகத் தமிழ் நாட்டு சங்கீத வித்வான்களுக்கும் அப்பொழுதுதான் கொஞ்சம் ஒழிந்த நேரம். எனவே டெல்லி கர்நாடக சங்கீத சபை இம் மாதங்களில் கச்சேரிகளை ஏற்பாடு செய்வதுண்டு. இவ் வருஷமும் அம்மாதிரியே மூன்று இளம் வித்வான்களின் கச்சேரிகள் டெல்லியிலும் சிம்லாவிலும் நடைபெற்றன.

அம் மூவர்கள் யாவர்? களக்காடு ஸ்ரீ ராமநாராயண பாகவதர், செம்பை ஸ்ரீ சி. ஏ. நாராயணன் பி. எஸ்ஸி. (செம்பை வைத்திநாத பாகவதரின் மாப்பிள்ளை), பல்லடம் வி. என். ராஜன், (புல்லாங்குழல்.)

களக்காடு ராமநாராயணரைப் பற்றி டெல்லி வாசிகள் இதுவரை கல்கியில் ஒன்று இரண்டு தரம் வெளி வந்த விமர்சனங்களிலிருந்தே அறிந்திருந்தார்கள். இப்பொழுது நான் அவரை நேரில் பார்க்கவும் கேட்கவும் சந்தர்ப்பம் வாய்த்தது. சுகமான சாரீரமும், தம்பி கூடப் பாடியதும் சேர்ந்து கச்சேரியை மிக்க சுகமாகச் செய்தன. முக்கியமாகக் குறிப்பிடத்தக்கது வராளி ராகமும், அதில் அவர் பாடிய முத்தையா பாகவதர் கீர்த்தனையும்.

அடுத்த படியாக, செம்பை வைத்தாவின் மாப்பிள்ளை ஸ்ரீ சி. ஏ. நாராயணன் மிக அபூர்வமாகப் பாடினார். அவர் கல்யாணி தோடி ராகங்களில் கையாண்ட பாணி தனி ரகம். சாரீரத்தில் மாத்திரம் செம்பையைப் போல் இல்லாமல், அவர் ஸ்வரம் பாடும் பொழுதும் செம்பையின் ஞான வித்தைகளைப் பிரயோகித்தார். இவர் கூடிய சீக்கிரம் மாமனாரின் ஸ்தானத்தை அடைவார் என்பதற்கு வேண்டிய அறிகுறிகள் இருந்தன.

மூன்றாவதாக, பல்லடம் வி. என். ராஜன் வெகு கச்சிதமாகப் புல்லாங்குழல் கச்சேரி செய்தார். அவருடைய வேணுகானம் காதுக்கு மிக இனிமையாகவே இருந்தது.

யுத்த காலமாக இருந்த போதிலும்கூட, டெல்லி சிம்லாவில் அடிக்கடி சங்கீத விருந்து கிடைத்துக்கொண்டுதான் இருக்கிறது.

எஸ். கே. ராமநாதன்.
காரியதரிசி, தென்னிந்திய
கர்நாடக சங்கீத சபை.

[நமது மற்றொரு சிம்லா நண்பர் "களக்காட்"டின் கச்சேரி திவ்யமான களை கட்டின கச்சேரியாகவும் இருந்தது என்று தெரியப் படுத்துகிறார். —ஆசிரியர்.]






ஸன்லைட் சோப் காய்ச்சும் ஒருவன் சொல்லுகிறான் . . .

“ஸன்லைட் சோப்பின் நுரையானது ஆடைகளிலிருந்து அழுக்கை உங்களுக்குச் சிரமமில்லாமல் போக்கிவிடுகிறது. அழுக்கு வஸ்திரங்களிலிருந்து தானாகவே அழுக்கைப் போக்கும் சக்தி வாய்ந்திருப்பதால் அதைச் சுயமாக வெளுக்கும் நுரை என்று சோப் தயாரிக்கும் ரசாயன சாஸ்திரிகள் கூறுகிறார்கள். சுய சக்தி வாய்ந்த சோப்பானது அழுக்கைத் தொட்டவுடன் அதைப் பிடித்துக்கொள்ளுகிறது. நுரை ஆடை முழுதும் பரவி இருக்கிறதா என்றுப் பார்த்துக் கொண்டால் போதும். பிறகு தண்ணீரில் அலசினவுடன் அழுக்கு போய்விடுகிறது.”

# ஸன்லைட் சோப்

## சுயமாக வெளுக்கும் நுரை உடையது




இப்பொழுது மெழுகுத் தாளினால் சுற்றப்பட்டு விற்கப்படுகிறது

S. 65-33 TM

ஒரு லீவர் பிரதர்ஸ் தயாரிப்பு

# ஆயிரக்கணக்கான பேர்கள் இன்று இதை சொல்லுகிறார்கள்!

"எனக்கு குழந்தைப் பருவத்தில் குலைக்கட்டி நோய் கண்டு, நோய் விகற்தன்மையால் அல்லது பிழைப்பது துர்லபம் என்ற நிலைமை ஏற்பட்டது. அதனை குணப் படுத்தி என் உயிரையும் காப் பாற்றியது நான் இந்த அற்புத மான ஜம்பியின் லிவர்க்யூர்"



குழந்தைகளின் குடல், ஈரல், குலைக்கட்டி முதலிய வியாதிகளை குணப்படுத்த 'மேன்மையான இதையும் கை கண்டதுமான அற்புத லிவரானி' என்று உயர்ந்த வைத்தியர்கள் கூறியிருக்கிறார்கள்.

## ஜம்பியின் லிவர் க்யூர்

எல்லா கடைகளிலும் விற்கப்படுகின்றன.

ஜம்பி வெங்கடரமணய்யா அண்ட் ஸன்ஸ், மைலாப்பூர் — மதராஸ்.
கப் ஆபீஸ் கும்பகோணம். பிராஞ்சுகள்: கல்கத்தா, லக்னோ, பம்பாய், பெங்களூர், திருச்சிராப்பள்ளி, விஜயவாடா.

---

## பற்கள் ஆடுகின்றனவா?

ஆனால் அவைகளுக்கு

# "தைமோஸின்"

சிகிச்சை அளியுங்கள்.

ப்ரோச் பல் வைத்தியர் Dr. C. M. தேசாய், L. D. S. அவர்களின் மருந்து முறைப்படி தயாரித்தது. டூத் பிரஷ் அல்லது விரலினால் சில துளிகள் உபயோகித்தால் போதும். மாயமாக பற்களின் காவியை அகற்றி, சொத்தை விழுவதைத் தடுத்து, பற்களை ஆரோக்யமாயும் வெண்மையாயும் செய்து, பயோரியா, ஈறு சம்பந்தமான வியாதிகள், வாய் வெக்காடு மற்றும், தொண்டை உபாதைகள் இவற்றைத் தடுக்கும்.

2 அவுன்ஸ் புட்டி விலை ரூ. 2.
தபால் பாக்கிங் சார்ஜு தனி.

டெண்டல் இன்ஸ்டிடியூட்
ஸேவ ஆஸ்ரமம், ப்ரோச்.

ஏஜண்டுகள்:
T. M. தாகூர் & கோ.
1-10, ஸ்டிரிங்கர்ஸ் தெரு, ஜி.டி. மதராஸ்.

---

## பிரபலமடைந்துவரும்



# ஜோதி காபி & டீ

நறுமணம் நற்சுவை இவ்விரண்டு அம்சங்களிலும் சிறந்து விளங்குகிறது — "ஜோதி காபி"

மொத்த ஆர்டர்களுக்கு எழுதுங்கள்.



JOTHI'S MFG. CO. TIRUPUR

# தியாகராஜ பாகவதர்

# ராஜகுமாரி வஸந்தகோகிலம்

## கிருஷ்ணன்·மதுரம்



டைரக்ஷன்: சுந்தர் ராவ் நட்கர்னி

ஸ்டூடியோ: சென்ட்ரல் ஸ்டூடியோஸ்
கோயமுத்தூர்

## ராயல் டாக்கீஸ்

# ஹரிதாஸ்



ராயல் டாக்கீ டிஸ்டிரிபியூட்டர்ஸ்
மதுரை    பெஜவாடா

P.S.M.Co.

தாய் சொல் மிக்க
[illegible]

# லோத்ரா

கர்ப்பாசயரோக
நிவாரணி

**கேசரி குடீரம் லிமிடெட், மதராஸ்**

தமிழ்நாடு ஏஜெண்டுகள் :
**சீதாராமா ஜெனரல் ஸ்டோர்ஸ்**
மேலக் கோபுர வீதி :: மதுரை.

---

# தி இந்தியன் பாங்க் லிட்.,



தென்னிந்தியாவின்
தலைசிறந்த பாங்க்

தலைமை ஆபீஸ் :
மதராஸ்.



பர்மாவிலும்
சென்னை மாகா
ணம் பூராவும்
கிளைகள்
உள்ளன.

வழங்கி வாக்களிக்கப்பட்ட

| | | | |
|---|---|---|---|
| மூலதனம் | ... | ரூ. | 60,00,000 |
| செலுத்தப்பட்ட மூலதனம் | | | 33,32,951 |
| ரிசர்வ் பண்டு | ... | ரூ. | 32,00,000 |
| டெபாஸிட்டுகள் | ... | ரூ. | 9,48,49,465 |

N. கோபால அய்யர், செக்ரடரி.

Regd. No. M. 4392

ரயிலிலிருந்து சாமான்களை எடுத்து வரவோ வெளியூர்களுக்கு சாமான்களை அனுப்பவோ நீங்கள் சிரமப்பட வேண்டாம். விவரங்களுக்கு எழுதுங்கள்







மதராஸ் & தென் மாராட்டா ரயில்வேக்கு லோகல் டெலிவரி கண்ட்ராக்டர்கள்

202-3, மவுண்டு ரோடு (போன் :-8536) மதராஸ்


Edited. Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press.
116-119. Sladens Garden. Poonamallee High Road. Kilpauk. Madras.